# நாள் முழுவதும்

காலை வேளையில்



# புத்துணர்ச்சி

பிற்பகலில்



# அளிக்க...

இரவில்






குளுமையான நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கெ பௌடர்களை உபயோகியுங்கள்

இரண்டு சேர்த்தியான இராஸ்மிக் பௌடர்கள்




ஹிமாலயா புக்கெ ஸ்னோ எல்லா சீதோஷ்ணஸ்திதிகளிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.

# கல்கி பொருளடக்கம்

மலர் 13 | 1953 செப்டம்பர் 27 | விஜய
இதழ் 9 | | புரட்டாசி 11



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று"

ஔவையார் பார்ப்பது யாவர்க்கும் நன்று



ஜெமினி

# ஔவையார்

இப்பொழுது 60 தியேட்டர்களில்





மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 9

# தமிழ்த் தந்தை திரு. வி. க.

தமிழுக்கும் தமிழ் எழுத்தாளர் குலத்துக்கும் தந்தையாக இருந்தார்; தொழிலாளர் குலத்துக்குத் தாயாகி விளங்கினார்; எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகிய திறத்தினால் அந்தணர் திலகமாகத் திகழ்ந்தார்; 'என் கடன் பணி செய்து கிடப்பதே!' என்ற திருவாக்கை வாழ்க்கையில் கடைப்பிடித்து நடந்தார்; தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராக வாழ்ந்தார்; அன்பே சிவம் என்ற உண்மையில் வாழ்க்கையெல்லாம் நினைத்திருந்தார்; இன்று அன்பிலும் சிவத்திலும் இரண்டறக் கலந்து விட்டார் திரு. வி. கலியாணசுந்தர முனிவர்.

இயற்கையோடியைந்த இன்பத்தையும் இன்பத்தோடியைந்த இயற்கையையும் பற்றி இடைவிடாது சிந்தித்தும் பேசியும் எழுதியும் வந்த ஞானி இன்று இயற்கையோடு இயைந்து இன்பத்தோடு ஒன்றி விட்டார்.

திரு. வி. கலியாணசுந்தரரின் புனித உடல் தீயிலே வெந்து சாம்பராகித் தெய்வத் தமிழகத்தின் மண்ணோடு மண்ணாகக் கலந்து விட்டது. எனினும், திரு. வி. க. 'இறந்து விட்டார்' என்றோ, நம்மைப் 'பிரிந்து விட்டார்' என்றோ சொல்ல முடியுமா? நம் உள்ளம் அக் கூற்றுக்களை ஒத்துக் கொள்ளவில்லை. "சந்தவர் அன்றி இருந்தவர் யாரே?" என்றார் கம்பர். தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் தம்மையே தந்தவரான திரு. வி. கலியாணசுந்தர வள்ளலை இறந்தவரோடு சேர்க்க முடியுமா? அப்படியானால், இங்கு இருந்தவர் வேறு யார்?

என்று மூன தென் தமிழைப்போல் திரு. வி. க.வின் அன்பு மயமான ஆன்மா இத் தமிழகத்தின் வெளியில் என்றும் நின்று தமிழ் மக்களை ஆசீர்வதித்துக் கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

அறுபத்து மூன்று நாயன்மார்கள் வானுலகில் வந்திருந்து "எங்களுடன் சேர்ந்து அறுபத்து நால்வராக ஆகிவிடுங்கள்!" என்று அழைத்திருப்பார்கள்.

பன்னிரண்டு ஆழ்வார்களும் விஜயம் செய்து "எங்களுடன் பதின்மூன்றாவது ஆழ்வாராக அமருக!" என்று கூறியிருப்பார்கள்.

புத்த பிக்ஷுக்களும் சமண முனிவர்களும் கிறிஸ்துவ தபோதனர்களும் வந்து நல்வரவு கூறியிருப்பார்கள்.

எனினும், திரு. வி. க. அவர்கள், "யான் அத்துணைச் சிறப்புக்கு உரியவனல்லேன்! தமிழன்பர்களின் அடியார்க்கு அடியேன்! தமிழகத்திலேயே இன்னமும் பணி செய்து கிடப்பேன்!" என்றுதான் மறுமொழி சொல்லியிருப்பார்.

*　　　*　　　*　　　*

இன்று தமிழ் நாட்டில் உள்ள அறிவாளிகள் எல்லாரும் தமிழ் மொழியைக் குறித்துப் பெருமை கொள்கிறார்கள். தமிழின் சிறப்பை அறிந்திருக்கிறார்கள். தமிழை மேலும் வளப்படுத்தப் பாடுபடுகிறார்கள். தமிழ்ச் சங்கங்கள், தமிழ்க் கழகங்கள், தமிழ்ப் பத்திரிகைகள் பல தமிழ் வளர்க்கும் துறையில் ஈடுபட்டிருக்கின்றன.

முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் தமிழ் நாட்டின் நிலை வேறு விதமாக இருந்தது. "தமிழ் ஒன்றுக்கும் உதவாத மொழி" என்ற எண்ணம் பரவியிருந்தது. முக்கியமாக, அரசியல் பிரச்னைகளைப் பற்றித் தமிழில் எழுதவும் பேசவும் முடியாது என்று கருதினார்கள். அறிவாளிகளும் படித்தவர்களும் "தமிழில் எனக்குப் பேச வராது" என்று சொல்வதில் பெருமை கொண்டார்கள்.

அத்தகைய சூழ்நிலையில் திரு. வி. கலியாண சுந்தரனார் வெஸ்லி கலாசாலைத் தமிழாசிரியர் பதவியிலிருந்து விலகி வந்து "தேசபக்தன்" என்னும் தினப் பத்திரிகையின் ஆசிரியரானார். அப் பத்திரிகையில் தினந்தோறும் வெளியான தலையங்கங்களிலிருந்து தமிழ் மொழியின் வன்மை இத்தகையது என்பதைத் தமிழர்கள் கண்டு கொண்டார்கள். திரு. வி. க. வின் தலையங்கங்கள் ஆயிரமாயிரம் தமிழ் இளைஞர்களின்

உள்ளங்களில் தேச பக்திக் கனலை மூட்டியது. அத்துடன் தமிழ் ஆர்வமும் பொங்கிப் பெருகச் செய்தது. தூய தமிழில் சொல்ல முடியாத பொருள் ஒன்றுமில்லை யென்பது பலருக்கும் தெளிவாயிற்று. பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து திரு. வி. க. பற்பல அழகிய சொற்களைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து தற்கால அரசியல் விவாதங்களில் உபயோகப்படுத்தினார். "அடடா! தமிழ் இத்தனை வளமுள்ள மொழியா!" என்று அனைவரும் வியந்தார்கள்.

கவிதை மூலமாகப் பாரதியார் தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் செய்த அரும் பணியைத் திரு. வி. க. தமிழ் வசன நடைமூலமாகச் செய்தார். எழுத்தினாலும் பேச்சினாலும் அத் திருப்பணியை அவர் ஆற்றினார். இனிய எளிய செந்தமிழ்ச் சொற்களைக் கொண்டும் அதிக நீளமில்லாத சிறிய வாக்கியங்களை அமைத்தும் திரு. வி. க. நிகழ்த்திய சொற்பொழிவுகள் மெத்தப் படித்த அறிவாளிகளையும் ஏட்டுக் கல்வியே பயிலாத தொழிலாளிகளையும் ஒரே சமயத்தில் கவர்ந்து மெய்ம் மறந்து கேட்டுக் கொண்டிருக்கும்படி செய்தன.

பெஸண்ட் அம்மையாரின் 'ஹோம் ரூல்' இயக்கம் நடத்திய காலத்தில் வீராவேசங் கொண்ட தேச பக்தராகப் பொதுப் பணியில் ஈடுபட்ட திரு. வி. க. வை, சில ஆண்டுகளுக்கெல்லாம் காந்தியடிகள் ஆட்கொண்டு விட்டார். வீராவேசக் கலியாணசுந்தரர் சாது கலியாண சுந்தரராக மாறிவிட்டார். காந்தியடிகளின் அஹிம்சா தர்மமும் அன்பு மதமும் அவருடைய உள்ளத்தில் குடி கொண்டன: அவருடைய எழுத்திலும் பேச்சிலும் ஒளிர்ந்தன. "மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்" என்ற நூல் எழுதிய பின்னர் அவருடைய வாழ்க்கை காந்திய நெறியிலிருந்து அப்பால் இப்பால் அகலாமல் சென்று கொண்டிருந்தது.

* * *

பாரத நாட்டுக்கும் பாரத சமுதாயத்துக்கும் உரிய சிறப்புக்களில் தனிப்பெரும் சிறப்பு,

"எப் பொருள் யார் யார் வாய்க் கேட்பினும்
—அப் பொருள்
மெய்ப் பொருள் காண்பதறிவு"

என்னும் வள்ளுவர் வாக்கில் அடங்கி யுள்ளது. அந்தத் தனிப்பெரும் சிறப்பைத் திரு. வி. க. வின் வாழ்க்கையிலும் எழுத்திலும் காணலாம். சைவம், வைஷ்ணவம், பௌத்தம், சமணம், கிறிஸ்துவம், இஸ்லாம் ஆகிய எல்லாச் சமயங்களிலும் உள்ள அடிப்படையான உண்மைகளைச் சமன் வயப் படுத்தும் சமரச சன்மார்க்க நெறியைத் திரு. வி. க. இடைவிடாமல் எடுத்துக் கூறி வந்தார். தாம் எழுதியுள்ள ஐம்பதுக்கு மேற்பட்ட நூல்களிலும் அந் நெறியை விளக்கியிருக்கிறார்.

அது போலவே சமூகத் துறையில் காந்தியத்தையும் மார்க்ஸீயத்தையும் இயைவிப்பதற்குத் திரு. வி. க. முயன்று வந்தார். காந்தியத்தின் அடிப்படையான அஹிம்சையும் சத்தியமும் திரு. வி. க. வைக் கவர்ந்தன. மார்க்ஸீயத்தின் இலட்சியமான பொது உடைமைக் கொள்கையும் திரு. வி. க.வைக் கவர்ந்தன. எனவே, அன்பு நெறியைக் கடைப்பிடித்துப் பொது உடைமைச் சமுதாயத்தை அமைக்கும் வகையைப்பற்றி இடைவிடாது சிந்தித்தும் பேசியும் எழுதியும் வந்தார்.

* * *

திரு. வி. க. கடைப் பிடித்தும் எழுதியும் பேசியும் வந்த அன்பு நெறியானது அவரை அன்பு மயமாக்கியது. அவருக்குப் பகைவர் என்பவர் யாருமில்லாமற் செய்தது. அவருடன் பழகியவர்கள் அனைவரும் அவருடைய நண்பர்கள் ஆனார்கள்; நண்பர்களாகவே இருந்து வந்தார்கள்.

திரு. வி. க. நோய்வாய்ப் பட்டுப் படுத்த படுக்கையா யிருக்கும் செய்தி அறிந்து அவரைப் பார்க்க எத்தனையோ நண்பர்கள் வந்தார்கள். "நாங்கள் செய்யக்கூடிய பணி ஏதாவது இருக்கிறதா! ஏதேனும் செய்வதற்கு வாய்ப்புக் கிடைத்தால் அதைப் பெறற்கரிய பேறாகக் கருதுவோம்" என்று பலரும் தெரிவித்துக் கொண்டார்கள். அவர்களுக்கெல்லாம் "உங்களுடைய அன்பே போதும். வேறு ஒன்றும் வேண்டாம்" என்ற பதிலையே திரு. வி. க. கூறி வந்தார்.

திரு. வி. க. வின் மனைவியார் பல்லாண்டுகளுக்கு முன்னரே அவரைப் பிரிந்து சென்றார். சொந்தக் குழந்தையும் இல்லை. ஆனால் அவருடைய தமையனாரின் குடும்பத்தார் திரு. வி. க. வுக்கு எந்தவிதமான குறைவும் இல்லாதபடி அன்புடனும் ஆதரவுடனும் பராமரித்து வந்தார்கள்; வேண்டிய பணிவிடைகளும் செய்து வந்தார்கள். அன்பே வடிவமான ஒருவருக்கு யார்தான் ஆர்வத்துடன் பணிவிடை செய்ய முன்வரமாட்டார்கள்!

திரு. வி. க. விடம் தம்முடைய அன்பையும் மரியாதையையும் தெரிவித்துக் கொள்ள முடியவில்லையே என்று அவருடைய நண்பர்களும் பக்தர்களும் சீடர்களும் குறைப்பட்டு வந்தார்கள். அதற்கு ஒரு வழி காணவும் முயன்று வந்தார்கள். அவர்களுடைய மனோரதம் சில தினங்களுக்கு முன்னால் ஒரு வடிவமும் அமைப்பும் பெற்றது.

இராயப்பேட்டையில் ஸ்ரீ கலியாண சுந்தரர் இளமைப் பருவத்தில் தோற்றுவித்த ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்த ஜன சபையின் சிறிய கட்டிடத்தில் திரு வி. க. வின் நண்பர்களும் பக்தர்களும் கூடினார்கள். திரு கே. பாலசுப்பிரமணிய ஐயர் எம். எல். ஸி. தலைமை வகித்தார். கோவை திரு ஸி. எஸ். ரத்தினசபாபதி முதலியார் உள்ளிட்ட தமிழன்பர்கள் பலர் வந்திருந்தார்கள்.

மேற்கூறிய சபையின் கட்டிடமான குகானந்த நிலயத்தை யடுத்துத் திறந்த வெளிப் பகுதி ஒன்று இருக்கிறது. இந்த இடத்தில் திரு. வி. க. வின் பெயரால் ஒரு மணி மண்டபம் அமைக்க வேண்டும் என்று அக்கூட்டத்தார் தீர்மானித்தார்கள். திரு. வி. க. அவர்கள் புற உடலுடன் இம் மண்ணுலகில் வாழ்ந்திருந்தபோதே மேற்கூறிய முடிவு செய்யப்பட்டது.

இது திரு.வி.க. அவர்களுக்கும் அறிவிக்கப்பட்டு அவருடைய சம்மதமும் பெறப்பட்டது.

திரு. வி. க. அவர்கள் தமது வாழ்வினில் நண்பர்களுடனும் தமிழன்பர்களுடனும் அளவளாவி மகிழ்வதற்கு உரிய இடமா யிருந்தது மேற்கூறிய குகானந்த நிலயம். எனவே, அதை யொட்டித் திரு. வி. க.வின் பெயர் கொண்ட மணி மண்டபம் அமைப்பது சாலப் பொருத்த முடையது.

திரு வி. க. வுக்கு நண்பர்கள் எத்தனையோ பேர் உண்டு என்றாலும், "உடலும் உயிரும்" என்று சொல்லக் கூடிய அளவுக்கு நட்புரிமை பூண்டிருந்தவர் ஸ்ரீ ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள். கல்வி இலாகாவில் பெரிய உத்தியோகப் பொறுப்பு வகித்திருந்து, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் அலுவல் பார்த்து விட்டு, தற்சமயம் ஓய்வு பெற்றுள்ளவர். உத்தியோகப் பொறுப்பிலிருந்து ஓய்வு பெற்றாரே தவிர, தமிழ்ப் பணியும் சமயப் பணியும் இடைவிடாது செய்து வருகிறவர்.



திரு. வி. க.

தோற்றம்: 1883 ஆகஸ்டு 26 - மறைவு: 1953 செப்டம்பர் 17.

# பதவி நாட்டியம்!




அப் பெரியார் திரு. வி. க. மண்டப அமைப்பு யோசனைக்குக் காரணமாக இருந்ததோடு, தற்போது மண்டப அமைப்புக் குழுவின் காரியதரிசிப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

திரு.வி.க. மண்டபத் திருப்பணியைத் தொடங்குவதற்கு நமது பழம் பெரும் தமிழ்ப் பத்திரிகையான "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன் அவர்கள் முன் மாதிரியாக வழி காட்டியுள்ளதும் மிகப் பொருத்தமுடையதாகும். தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவில் கூட்டப்பட்ட இரங்கல் கூட்டத்திற்குத் தலைமை வகித்த ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன், திரு. வி. க. மணி மண்டபத் திருப்பணிக்கு ரூ. 500 நன்கொடை அளிப்பதாகத் தெரிவித்ததைத் தமிழ் எழுத்தாளர் குலம் பெரிதும் பாராட்டும் என்பதில் ஐயமில்லை.

'சுதேசமித்திரன்' ஆசிரியர் காட்டியுள்ள வழியைப் பின்பற்றித் திரு. வி. க. வின் நண்பர்களும் தமிழ் அன்பர்களும் தங்களால் இயன்ற பொருளுதவியை விரைந்து செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

திரு. வி. க. வின் புற உடல் மறைந்து ஓராண்டு முடியும் போது அவருடைய ஞாபகார்த்த மணி மண்டபம் கம்பீரமாக எழுந்து காட்சியளித்தால், தமிழ்ப்பெரு மக்களின் நன்றி உணர்வுக்கு அஃது ஒரு சிறந்த சின்னமாகவும் விளங்கும் அல்லவா!

# நல்விடை அளிக்கிறோம்

குடித்தனமோ, துரைத்தனமோ என்று சொல்லுவது உண்டு. குடித்தனத்தில் உள்ள இன்ப துன்பங்கள் துரைத்தனத்தில் இருக்கின்றன. துரைத்தனத்தில் உள்ள லாப நஷ்டங்கள் குடித்தனத்திலும் இருக்கத்தான் செய்கின்றன.

குடித்தனம் தனி ஒருவரின் குடும்ப நிர்வாகம்; துரைத்தனம் ஜனசமூகத்தின் மாபெரும் குடும்ப நிர்வாகம் ஆகும்.

இந்த இரண்டுக்கும் அதிக வேற்றுமை இல்லை என்பதைச் சென்ற சில தினங்களாகச் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷன் அளிக்கும் காட்சிகள் நிரூபித்து வருகின்றன.

ஆந்திர சகோதரர்கள் தனி மாகாணம் அமைக்கப் போகிறார்கள் அல்லவா! அதற்காக இங்கிருந்து சர்க்கார் காரியாலய சம்பந்தமான சகல சாதனங்களும் சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து வண்டி வண்டியாகச் சென்று வருகின்றன.

தஸ்தாவேஜுகள் முதல், தலைக்கு மேலே சுழலும் மின்சார விசிறிகள் முதல், தண்ணீர்ப் பானை வைக்கும் முக்காலி வரையில், மிதியடிகள் முதலிய தட்டு முட்டுச் சாமான்கள் வரையில் எல்லாச் சாதனங்களும் பங்கிடப்பட்டு இங்கிருந்து அனுப்பப்படுகின்றன. அதைப் பார்த்த ஜனங்கள், ஆந்திரர்கள் சென்னையிலிருந்து பிரிந்து தனிக்குடித்தனம் போவது போல் தோன்றுகிறது என்று ஆச்சரியப்பட்டார்களாம்.

'ஆந்திர மாகாணம் பிரிக்கப்படும் சமயத்தில் ராஜாஜி சென்னைப் பிரதம மந்திரியாக இருப்பது நமது பாக்கியமே; இல்லாவிடில் தமிழர்கள் சென்னை மாநகரை இழந்திருப்பார்கள்" என்று தமிழ் மகாஜனங்கள் ராஜாஜியை மனமார வாழ்த்துகின்றனர்.

"இன்று ராஜாஜி சென்னை சர்க்கார் பீடத்தில் இராவிடில் ஆந்திர மாகாணம் இவ்வளவு துரித

மாகவும் சுமுகமாகவும் பிரிக்கப்பட்டிருக்க முடியாது" என்று ஆந்திரப் பிரமுகர்களும் ராஜாஜிக்குத் தங்கள் நன்றியைத் தெரிவித்து வருகிறார்கள்.

ஆந்திர மாகாணத்தின் முதல் கவர்னராக நியமிக்கப்பட்டுள்ள ஸ்ரீ சி. எம். திரிவேதிக்கு ஆந்திரப் பிரமுகரான ஸ்ரீ வி. ராமகிருஷ்ண சென்ற வாரம் சென்னையில் விருந்து அளித்தார். அப்போது அவர் ஆந்திர மகா ஜனங்களின் சார்பில் ராஜாஜிக்கு நன்றி கூறினார்.

அங்கு பிரசன்னமாயிருந்த ராஜாஜி தமிழ் மக்கள் சார்பில் புதிய ஆந்திர மாகாணத்துக்கு மனப்பூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்தார்.

புதிய கவர்னர் ஸ்ரீ திரிவேதி, சென்னை மாகாணத்துக்கும் ஆந்திர மாகாணத்துக்கும் இடையே அன்யோன்னிய பாவமும் நல்லெண்ணமும் நிலவ வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர்.

ராஜாஜியின் தலைமையில் தமிழர்கள் ஆந்திர மாகாணம் ஏற்படுவதற்கு எள்ளளவும் ஆட்சேபிக்காமல் இணங்கியதால்தான், மேற்படி மாகாணம் உருவாவது இவ்வளவு எளிதாயிற்று. எனவே, ஆந்திரர்கள் பழைய மாற்சரியங்களை மறந்து சென்னை மாகாணத்துடன் நட்பும் நல் உறவும் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

தங்களுடைய மாகாணத்தின் நிர்வாகத்தை ஏற்பதற்காகச் சென்னை மாகாணத்திலிருந்து பிரிந்து செல்லும் ஆந்திர சகோதர சகோதரிகளுக்கு நல் விடை அளிக்கிறோம்.

# நல் வரவு கூறுகிறோம்

புதிய ஆந்திர மாகாணத்தின் ஆரம்ப வைபவத்தை நடத்தி வைக்கப் பாரத நாட்டின் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜி அக்டோபர் முதல் தேதி கர்னூலுக்கு வருகிறார். அதன்பின் நேருஜி தமிழ் நாட்டுக்கும் விஜயம் செய்ய இசைந்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம் ஆகும்.

வெளி நாடுகள் சம்பந்தப்பட்ட வரையில் இந்தியா அனுஷ்டித்து வரும் அப்பழுக்கற்ற கொள்கைக்கு ஜவாஹர்லால்ஜியின் அரசியல் மேதையே காரணம். இந்திய சர்க்காரின் வெளி நாட்டுக் கொள்கையைச் சென்ற வாரம் இந்தியா பார்லிமெண்டில் உள்ள எல்லாக் கட்சிகளும் ஏக மனதாக அங்கீகரித்தது குறிப்பிடத் தக்கது.

இன்று உலகம் இரண்டாகப் பிரிந்து நிற்கிறது. ருஷ்யாவுக்குப் பயந்த நாடுகள் அமெரிக்காவின் கட்சியில் சேர்ந்திருக்கின்றன. அமெரிக்காவைக் கண்டு அஞ்சும் நாடுகள் ருஷ்யாவுடன் சேர்ந்து கச்சை கட்டிக் கொண்டு நிற்கின்றன.

இந் நிலைமையில் இந்தியா அஞ்சா நெஞ்சத்துடன், ஆத்ம பலத்தைத் தவிர வேறு ஆயுத பலம் எதுவுமின்றி, நீதியை அடிப்படையாகக் கொண்ட நடு நிலைமைக் கொள்கையை அனுஷ்டித்து வருகிறது. அதன் பயனாக, உலக நாடுகளிடையே இந்தியாவுக்கு உள்ள மதிப்பு மிகவும் அதிகமாகியிருக்கிறது. சர்வதேசப் பிரச்னைகளை ஒட்டி இந்தியாவின் கொள்கை என்ன என்பதை அமெரிக்கா, ஐரோப்பா நாடுகள் ஆர்வத்துடன் எதிர் பார்க்கின்றன; இந்தியாவை ஏக மனதாகப் பின்தொடர ஆசிய நாடுகள் தயாராக இருந்து வருகின்றன. கொரியாவில் நியமிக்கப்பட்டுள்ள நடுநிலைமைக் கமிஷனுக்கு இந்தியப் பிரமுகர் தலைமை வகிக்கிறார். சர்வதேச மகா சபைக்கு இந்தியப் பெண்மணியே தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். இந்தியாவினிடம் உலகில் உள்ள பெரும்பாலான நாடுகளும் பூரண நம்பிக்கை வைத்திருக்கின்றன. மூன்றாவது மகா யுத்தம் ஏற்படாமல் உலகத்தைக் காப்பாற்ற வேண்டுமாயின், இந்தியா காட்டும் சமாதான வழியைப் பின்பற்ற வேண்டியது அவசியம் என்ற அபிப்பிராயம் உலக நாடுகளிடையே நாளுக்கு நாள் பலம் அடைந்து வருகிறது.

உலகமே வியக்கத் தக்க இத்தகைய நிலைமைக்கு, சிறிதும் வழுவாது காந்தி வழியைப் பின்பற்றும் ஜவாஹர்லால்ஜிதான் காரணம். அப்பேர்ப்பட்ட அருமைத் தலைவர் அக்டோபர் மாத ஆரம்பத்தில் தமிழ் நாட்டைச் சேர்ந்த முக்கிய இடங்களுக்கு விஜயம் செய்கிறார். ஆங்காங்கு லட்சோப லட்சம் ஜனங்கள் கூடி நமது தலைவருக்கு அமோக வரவேற்பு அளித்துத் தங்களுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை. அவரது உபதேசங்களைக் கேட்டுப் பயனடைவதன் மூலம், இந்தியாவின் புகழ் எட்டுத் திக்கிலும் சுடர் விடும்படி செய்வார்கள் என்பதிலும் சந்தேகமில்லை.

அட்டைப்பட விளக்கம்

"இந்தப் பெண், பாவம் தன்னந் தனியாக உட்கார்ந்து வீணை மீட்டிக் கொண்டிருக்கிறாளே!' என்று யாராகிலும் அனுதாபப் பட்டால் அவர்கள் பெரிய தவறு செய்தவர்க ளாவார்கள்.

ஏனெனில் அவள் சற்றும் அனுதாபப் பட வேண்டிய நிலையில் இல்லை.

அவள் பிறருடைய விமரிசனத்துக்கு ஆளாகாமல், 'ஆ, சுருதி தவறி விட்டது!' 'பைரவியில் முகாரி கலந்து விட்டது' என்பன போன்ற குற்றங் குறைகளைக் கேட்க வேண்டி யிருக்குமோ என்ற பயமில்லாமல் நிம்மதியாக வீணை வாசிக்க முடிகிறதல்லவா? நாத இன்பத்தில் லயித்து நிற்க முடிகிறது அல்லவா? தன்னை மறந்த லயந்தன்னில் இருக்க முடிகிறதல்லவா? இதுவன்றோ தனிமை அளிக்கும் வசதி!

இதைக் குறித்தே மகா கவி பாரதியாரும்

தனிமை கண்டதுண்டு—அதிலே
சாரம் இருக்குதம்மா!

என்று பாடிவிட்டுப் போனார்.

ஆயினும் எந்த இன்பத்துக்கும் ஒரு எல்லையுண்டு என்று குறிப்பிடுவது போல், அதோ பாருங்கள் ஒரு பணிப் பெண் ஏதோ தட்டில் ஏந்திக் கொண்டு வருவதை!

# பெருமையை மறைக்கும் புல்லுருவிகள்

சுதந்திர இந்தியாவில் இன்னும் கூடச் சில பிரதேசங்கள் அன்னிய நாடுகளுக்குச் சொந்தமாக இருந்து வருகின்றன அல்லவா! அவைகளை, இந்தியாவின் முகத்தில் உள்ள பருக்கள் என்று ஒரு சமயம் ஜவாஹர்லால்ஜி வர்ணித்தார். சுதந்திர இந்தியாவின் வனப்பை, பெருமையை மேற்படி பிரதேசங்கள் மறைப்பதாக இருக்கின்றன என்பதே நேருஜி கூறியதன் கருத்தாகும்.

சென்ற வாரம் ஜவாஹர்லால்ஜி இந்தியா பார்லிமெண்டில் பேசியபோது, இந்தியாவைப் புல்லுருவிகள் போல் விடாமல் பற்றிக் கொண்டிருக்கும் அன்னிய நாடுகளுக்கு மறுபடியும் எச்சரிக்கை விடுத்தார்.

பாரத நாட்டைச் சேர்ந்த கோவா முதலிய இடங்களில் போர்ச்சுகீய சர்க்கார் கைக்கொண்டு வரும் ஆட்சேபகரமான முறைகளைக் கண்டித்து லிஸ்பனில் உள்ள இந்திய ஸ்தானிகரை இந்திய சர்க்கார் வாபஸ் செய்து கொண்டு விட்டனர்; அங்கிருந்த இந்திய ஸ்தானிகர் காரியாலயத்தையும் பல மாதங்களுக்கு முன் மூடி விட்டார்கள்.

இந்தியா இத்துடன் நின்றுவிடப் போவதில்லை; தொடர்ந்து படிப்படியாக வேறு முறைகளையும் கைக் கொள்ள உத்தேசித்திருக்கிறது என்று நேருஜி எச்சரித்திருக்கிறார்.

"சுதந்திர இந்தியாவில் அன்னியர்களுக்குச் சொந்தமான இடங்கள் கள்ள வியாபாரத்துக்கும் அரசியல் சூழ்ச்சிக்கும் நிலைக்களமாக இருந்து வருகின்றன. சமாதான காலத்தில் கூட அந்தப் பிரதேசங்கள் கஷ்ட நஷ்டங்களையும் ஆபத்தையும் விளைவிக்கக் கூடியவை. அப்படியிருக்க, துரதிர்ஷ்ட வசமாக யுத்தம் ஏற்படுமாயின், மேற்படி பிரதேசங்கள் இந்தியாவுக்கு எவ்வளவு பேராபத்தாக முடியும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை" என்று ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டார்.

சந்திரநாகூர் இந்தியாவுடன் சேர்ந்து மூன்று வருஷங்களுக்குமேல் ஆகின்றன. அப்படியிருந்தும் இன்னும் கூட பிரஞ்சு அதிகாரிகள் அந் நகரில் தங்களுக்கு உள்ள பிடியைப் பூரணமாக விட்டு விட மனம் இல்லாதவர்களாக இருக்கின்றனர்.

அன்னியர்கள் உரிமை கொண்டாடும் மற்ற எல்லா இடங்களும் இந்தியாவின் கடற்கரையில் இருக்கின்றன. இவ்விதம் கிழக்கேயும் மேற்கேயும் அன்னியர்களுக்குச் சொந்தமான துறைமுகங்கள் இருப்பது யுத்த காலத்தில் இந்தியாவின் தற்காப்புக்கே அனர்த்தமாக முடியலாம். ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டிருப்பது போல் சமாதான காலத்தில்கூட அவைகள் இந்தியாவின் பொருளாதார க்ஷேமத்துக்கும் அரசியல் அமைதிக்கும் குந்தகம் விளைவிப்பதாக இருக்கின்றன.

எனவே, அப்பிரதேசங்களிலிருந்து அன்னியரின் ஆதிக்கத்தைக் காலதாமதமின்றி அறவே ஒழிக்க வேண்டும். அவ்விதம் ஒழிந்தால்தான் இந்தியா பெற்ற சுதந்திரம் நூறு சத விகிதம் பூரணமாகும். அவ்விஷயமாக இந்திய சர்க்கார் கைக் கொள்ளும் சகல முறைகளையும் இந்திய மக்கள் ஏகோபித்து ஆதரிப்பார்கள் என்பது நிச்சயம்; இதில் கட்சி வேற்றுமையோ, கருத்து வேற்றுமையோ எதுவும் இருக்க இடமில்லை.

---

## எங்களால் இயலாது !






EP




## அத்தியாயம் 42

# மலையமான் துயரம்

சம்புவரையர் மூன்கட்டுக்கு வந்ததும் கந்தமாறனைத் தனியாக அழைத்து, "மகனே! நம் குலத்துக்கு என்றும் நேராத ஆபத்து இன்று நேர்ந்திருக்கிறது! அதிலிருந்து நாம் தப்பவேண்டுமானால் நான் சொல்வதை உடனே நீ தடை சொல்லாமல் நிறைவேற்ற வேண்டும்" என்று கூறினார்.

கரிகாலருடைய மரணம் கந்தமாறனைப் பெரிதும் கலங்கச் செய்திருந்தது. தான் வந்தியத்தேவனைக் கொல்ல நினைத்தது எவ்வளவு பெரிய தவறு என்பதையும் அவன் உணர்ந்திருந்தான். "தந்தையே! மூடனாகிய என்னாலேதான் நம் குலத்துக்கு இந்த ஆபத்து நேர்ந்திருக்கிறது. அதற்காக என்னை மன்னியுங்கள். தாங்கள் என்ன கட்டளையிட்டாலும் அதை நிறைவேற்றி வைக்கிறேன்" என்றான்.

"நீ உடனே ஒருவருக்கும் தெரியாமல் இந்த மாளிகையை விட்டு வெளியேற வேண்டும். நான் படுக்கும் அறையில், கட்டிலுக்கு அடியிலிருந்து சுரங்கப் பாதை ஒன்று போகிறது உனக்குத் தெரியும் அல்லவா? அது வேட்டை மண்டபத்திலிருந்து போகும் சுரங்கப் பாதையில் இம் மாளிகையின் மதில்ச் சுவரண்டை போய்ச் சேருகிறது......"

"தந்தையே! இந்த இக்கட்டான நிலைமையில் தங்களைத் தனியே விட்டுவிட்டு என்னைச் சுரங்க வழியில் தப்பித்துப் போகச் சொல்கிறீர்களா?" என்றான் கந்தமாறன்.

"பிள்ளாய்! அதற்குள் உன் வாக்குறுதியை மறந்து பேசுகிறாயே? ஆம்; நீ போகத்தான் வேண்டும். கொல்லி மலைத் தலைவன் வல்வில் ஓரியின் வம்சத்துக்கு இப்போது நீ ஒருவன்தான் இருக்கிறாய். அவசியமாயிருந்தால், நீ அந்த மலைக்கே போய் மறைந்து வாழவேண்டும். மதுராந்தகத் தேவருக்குப் பட்டங்கட்டுவது என்று நிச்சயமாகி, நான் உனக்குச் செய்தி அனுப்பிய பிறகுதான் திரும்பி வரவேண்டும்!" என்றார் சம்புவரையர்.

"மன்னிக்க வேண்டும், தந்தையே! மறைந்து வாழ்வது என்றால் இயலாத காரியம். வல்வில் ஓரியின் குலத்துக்கு அத்தகைய கோழைமைப் பெற்ற அபகீர்த்தி வேறு வரவேண்டுமா? இந்தக் கணமே என்னுடைய இன்னுயிரைக் கொடுக்கச் சொன்னீர்களானால் கொடுக்கிறேன். ஆனால் ஒளிந்து வாழ ஒருப்படேன்!" என்றான் கந்தமாறன்.

சம்புவரையர் சிறிது யோசனை செய்துவிட்டு, "மகனே! உன்னைச் சோதனை செய்வதற்காகக் கூறினேன். ஓடித் தப்பித்துக் கொள்ளவும் மறைந்து வாழவும் நீ இஷ்டப்படவில்லை. நல்லது; உயிருக்கு ஆபத்து நேரக்கூடிய வீரச் செயலிலேதான் உன்னை நான் ஏவப் போகிறேன். சுரங்கப்பாதை வழியாக உடனே வெளியேறிச் செல்! ஆனால் கொல்லிமலைக்குப் போக வேண்டாம்! நேரே தஞ்சாவூருக்குப் போ! பெரிய பழுவேட்டரையர் அநேகமாக அங்கே இருக்கலாம். இருந்தால், அவரிடம் இங்கே நடந்ததைச் சொல்லு! அவர் இல்லாவிட்டால் சின்னப் பழுவேட்டரையரிடமும் மதுராந்தகத் தேவரிடமும் சொல்லு!......"

"ஐயா! இங்கே என்ன நடந்தது என்று அவர்களிடம் சொல்லட்டும்?"

"இது என்ன கேள்வி? கரிகாலரின் மரணத்தைப் பற்றிச் சொல்லு! 'நாம் உத்தேசித்திருந்த காரியம் விதி வசத்தினால் வேறு விதமாக நடந்து விட்டது! கரிகாலர் மாண்டு விட்டார்! மதுராந்தகருக்குப் பட்டம் கட்ட இதுதான் தக்க சமயம்' என்று அவர்களுக்குத் தெரியப்படுத்து! மலையமானும் கொடும்பாளூர் வேளாரும் அதற்குக் குறுக்கே நிற்பார்கள். நமது பலத்தை யெல்லாம் உடனே திரட்டி அந்த இரண்டு பேரையும் அடியோடு அழித்து விடவேண்டும் என்று கூறு!" என்றார் சம்புவரையர்.

"கரிகாலர் எப்படி மரணமடைந்தார் என்று அவர்கள் கேட்டால் என்ன சொல்லட்டும்?" என்றான் கந்தமாறன்.

"வேறு என்ன சொல்கிறது? வாணர் குலத்தைச் சேர்ந்த வந்தியத்தேவன் அவரைக் கொலை செய்து விட்டான் என்று கூறு! இன்னும் ஒரு முக்கியமான விஷயம். இதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்! வந்தியத்தேவன் ஈழ நாட்டுக்குப் போய்த் திரும்பி வந்திருக்கிறான். அங்கே அருள்மொழித்தேவனையும் பிறகு பழையாறையில் இளைய பிராட்டியையும் பார்த்து விட்டு வந்திருக்கிறான். அருள்மொழித்தேவன் நாகைப்பட்டினத்தில் மறைந்திருந்து இப்போது வெளிப்பட்டிருப்பதாக ஒரு செய்தி வந்திருக்கிறது. அருள்மொழித் தேவன் சிங்காதனம் ஏறும் ஆசையினால் அண்ணனைக் கொல்லுவதற்கு வந்தியத் தேவனை அனுப்பி வைத்தான் என்ற வதந்தியைச் சோழ நாட்டில் பரப்ப வேண்டும். பழையாறை இளைய பிராட்டியும் இதற்கு உடந்தை யென்ற சந்தேகத்தையும் உண்டுபண்ண வேண்டும். இதை யெல்லாம் பழுவேட்டரையர்களிடமும் மதுராந்தகத் தேவரிடமும் சொல்லு!......"

"தந்தையே! தாங்கள் சொல்வதே உண்மையாகவும் இருக்கலாம் அல்லவா? சிநேகத் துரோகியான வந்தியத் தேவன் அத்தகைய பயங்கரமான எண்ணத்துடனேயே இந்த மாளிகைக்கு வந்திருக்கலாம் அல்லவா?"

"இருக்கலாம், மகனே! ஆனால் பழுவூர் இளைய ராணி திடீரென்று மாயமாய் மறைந்து போனதற்குக் காரணம் கண்டு பிடிக்க வேண்டுமே? அவள் பேரிலும் அவளுக்கு உடந்தையாயிருந்த பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளின் பேரிலும் வல்லவரையன் வந்தியத்தேவன் குற்றம் சாட்டுகிறானே!......"

"குற்றம் செய்தவன் மற்றவர்கள் பேரில் அதைச் சுமத்தவே பார்ப்பான். இப்போது எனக்கு எல்லாம் விளங்குகிறது, தந்தையே! பழுவூர் இளைய ராணியைப் பழையாறைக் குந்தவை தேவிக்கு எப்போதும் பிடிப்பதேயில்லை. கரிகாலரைக் கொன்று விட்டு அதே சமயத்தில் பழுவூர் இளைய ராணியை அபகரித்துக் கொண்டு போவதற்கும் அவள்தான் ஏற்பாடு செய்திருக்க வேண்டும். முதன் மந்திரி அநிருத்தரும் இதற்கு உடந்தை போலிருக்கிறது. அதற்காகவே இந்த வந்தியத் தேவனை அவர்கள் அனுப்பியிருக்கிறார்கள்! ஐயோ! அவர்களுடைய சூழ்ச்சியை அறியாமல் மோசம் போய்விட்டோமே?"

"கந்தமாறா! போனதைப் பற்றி வருந்துவதில் பயனில்லை. இனிமேல் நடக்க வேண்டியதைப் பார்க்க வேண்டும். நீ உடனே புறப்பட்டுச் செல்! கரிகாலரின் மரணச் செய்தி சுந்தர சோழருக்குப் போய்ச் சேர்வதற்கு முன்னால், தஞ்சையில் வேறு யாருக்கும் தெரிவதற்கு முன்னால், பழுவேட்டரையர்களுக்கும் மதுராந்தகருக்கும் தெரிய வேண்டும். ஆகையால் நீ விரைந்து செல்! தஞ்சைக் கோட்டைக்குள் போவதற்கும் இரகசியச் சுரங்க வழி உண்டு என்பது உனக்குத் தெரியும் அல்லவா?......"

"தெரியும், தெரியும்."

"அப்படியானால் உடனே புறப்படு!"

"புறப்படுகிறேன், தந்தையே! என் தங்கை — மணிமேகலை—அவளைப் பற்றித்தான் சிறிது கவலையாயிருக்கிறது."

"வேண்டாம் உனக்கு அந்தக் கவலை! நம்மிடம் அவள் உளறியதுபோல் வேறு யாரிடமும் உளறுவதற்கு நான் விடமாட்டேன். அப்படி அவள் உளற முற்பட்டால், அவளை என் கையினாலேயே கொன்று விடுவேன்......"

"ஐயோ! அதற்காகத்தான் கவலைப்படுகிறேன். தங்கள் கோபத்தை எண்ணித்தான் பயப்படுகிறேன்......"

"வேண்டாம்! அவளுடைய மனத்தை மாற்றும் வழி எனக்குத் தெரியும். ஆகா! விதி விசித்திரமானதுதான்! முதலில் அவளை நாம் மதுராந்தகத் தேவருக்கு மணம் செய்து கொடுப்பது என்று எண்ணினோம். இடையில் அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு கரிகாலருக்கு மணம் செய்து கொடுக்க உத்தேசித்தோம். கரிகாலர் இன்று பிணமாகக் கிடக்கிறார். நல்லவேளை, மணிமேகலை

யின் உள்ளம் அவரிடம் செல்லவில்லை. நமது பழைய உத்தேசத்தையே நிறைவேற்ற வேண்டியதுதான்......"

"ஆனால், தந்தையே! மணிமேகலையின் உள்ளம் இப்போது அந்தச் சண்டாளன் வந்தியத்தேவன் பேரில் அல்லவா போயிருப்பதாகத் தெரிகிறது?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை, மகனே! மணிமேகலைக்குத் தன் மனத்தைத் தான் அறியும் பிராயமே இன்னும் வரவில்லை. அவளை நான் கவனித்துக் கொள்கிறேன். நீ இனி ஒரு கணமும் இங்கே தாமதிக்க வேண்டாம்!"

அச்சமயம் மதிள் சுவர்களுக்கு வெளியில் வெகு சமீபத்தில் எழுந்த ஆரவாரத்தைக் கேட்ட கந்தமாறன் "அப்பா! இது என்ன? மலையமான் படைகள் நெருங்கி வருவதுபோல் காண்கிறதே? மலையமானைத் தாங்கள் மாலையில் பார்த்தபோது அந்தக் கிழவன் என்ன சொன்னான்?" என்று கேட்டான்.

"நல்ல மங்களகரமான செய்தியைத்தான் சொன்னான். மணிமேகலையை ஆதித்த கரிகாலருக்கு மணம் செய்து கொடுக்கப் போகும் செய்தி அறிந்து அக்கிழவன் மிக்க மகிழ்ச்சி அடைந்தானாம். அதே மணப் பந்தலில் அவனுடைய மகள் வயிற்றுப் பேத்தி ஒருத்தியையும் மணஞ் செய்து கொடுக்கலாம் என்று அழைத்து வந்திருக்கிறானாம்! அழகாயிருக்கிறதல்லவா? மாளிகைக்கு வரும்படி நான் அழைத்ததற்கு, நாளைப் பொழுது விடிந்ததும் நல்ல முகூர்த்தத்தில் வருவதாகச் சொல்லியிருக்கிறான். அவனுடைய வீரர்கள் இப்போதே வரப்போகும் திருமணத்தைக் கொண்டாடுகிறார்கள் போலிருக்கிறது!"—இவ்விதம் கூறிவிட்டுச் சம்புவரையர் சிரிக்கப் பார்த்தார். ஆனால் சிரிப்பு அரைகுறையாக நின்று விட்டது.

"வா! வா! நானே உன்னைச் சுரங்கப் பாதையில் கொண்டு போய் விட்டு விட்டு வருகிறேன். வழியில் ஒரு விநாடியாவது நீ தாமதிக்கக் கூடாது. வழியில் எங்கேயாவது குதிரை சம்பாதித்துக் கொண்டு விரைந்து போக வேண்டும்!" என்றார்.

சம்புவரையர் கையில் ஒரு தீபத்தை எடுத்துக் கொண்டார். இருவரும் சுரங்கப் பாதையில் புகுந்தார்கள். விரைவாக நடந்தார்கள். மாளிகையின் மதிள் சுவரைக் கந்தமாறன் கடந்த பிறகு, சம்புவரையர் அவனைக் கட்டித் தழுவி ஆசி கூறிவிட்டுத் திரும்பினார். "விளக்கு வேண்டுமா?" என்று கேட்டதற்குக் கந்தமாறன் "வேண்டாம், அப்பா! எனக்கு இந்த வழி நன்றாய்த் தெரிந்ததுதானே? கண்ணைக் கட்டி விட்டாலும் போய் விடுவேன்!" என்றான்.

அவன் சுரங்கப் பாதையில் கண்ணுக்கு மறைந்த பிறகு சம்புவரையர் திரும்பினார். வழியில் வேட்டை மண்டபத்துக்குள் புகுந்தார். அடுத்த அறையில் ஏதாவது சத்தம் கேட்கிறதா என்று காது கொடுத்துக் கேட்டார். ஒன்றும் கேட்கவில்லை. சிலகண நேரம் தயங்கி நின்றார். பிறகு, ஒரு முடிவான தீர்மானத்துக்கு வந்தவர் போல், பெருமூச்சு விட்டார். விளக்கை நன்றாகத் தூண்டி, வைக்க வேண்டிய இடத்தில் வைத்து விட்டு விரைந்து திரும்பிச் சென்றார்.

திரும்பச் சம்புவரையர் முன் கட்டுக்குச் சென்றதும், அந்தப்புரத்துப் பெண்களையெல்லாம் ஒன்று சேர்த்தார்.

அவர்கள் எல்லாரும் ஏற்கெனவே கலங்கிப் போயிருந்தார்கள். கண்ணீரும் கம்பலையுமாகக் கந்தமாறனால் அந்தப்புரத்தில் கொண்டு வந்து தள்ளப்பட்ட மணிமேகலையைக் கேட்டுஅவர்கள் ஒருவாறு கரிகாலன் மரணத்தைப் பற்றித் தெரிந்து கொண்டிருந்தார்கள்.

"பெண்களே! நம் குலத்துக்கு என்றுமில்லாத பெரும் விபத்து ஏற்பட்டு விட்டது. எந்த நிமிஷத்திலும் நீங்கள் இந்த மாளிகையை விட்டுப் புறப்படச் சித்தமாயிருக்க வேண்டும். பல தினங்கள் காட்டிலும் மலையிலும் காலங் கழிக்கவும் துணிவு பெறவேண்டும். எல்லாரும் அவரவர்களுடைய ஆடை ஆபரணங்களை எடுத்துக் கொண்டு நிலா முற்றத்துக்கு வந்து சேருங்கள். அழுகைச் சத்தமோ, புலம்பல் சத்தமோ 'மூணுக்' என்று கூடக் கேட்கக் கூடாது! தெரியுமா?" என்று எச்சரித்தார்.

பின்னர் சம்புவரையர் மாளிகையின் முன் வாசற்பக்கம் வந்தார். முன் வாசல் கோபுரத்தின் மேல் ஏறி வெளியிலே என்ன அவ்வளவு ஆரவாரம் என்று தெரிந்து கொள்ள விரும்பினார். அதற்கு அவகாசம் இடைக்கவில்லை. ஏனெனில், அவர் முன் வாசலை நெருங்கும் போதே வெளியிலிருந்து வீரர்கள் கோட்டை வாசற் கதவுகளைத் தகர்த்துத் தள்ளிவிட்டு உள்ளே தடதடவென்று புகுந்து கொண்டிருந்தார்கள். வாசற் காவலர்கள் அவர்களைத் தடுக்க முயன்று முடியாமல் கீழே விழுந்து கொண்டிருந்தார்கள்.

இதுவல்லாமல், கோட்டையின் மதிள் சுவர் மீது ஏறிக் குதித்தும் வீரர்கள் உள்ளே புகுந்து கொண்டிருந்தார்கள்.

சம்புவரையரின் உள்ளத்தில் பெரும் பீதியும் கலக்கமும் ஏற்பட்டன. கரிகாலன் கொலையுண்ட செய்தி ஒருவேளை மலையமானுக்குத் தெரிந்து விட்டதா, என்ன? இதற்குள் எவ்விதம் தெரிந்திருக்கும்? — தெரிந்தால் தெரியட்டும். எப்படியும் தெரிந்துதானே தீர வேண்டும்? ஆனால் இன்னும் சிறிது நேரத்துக்கு இவர்களை இங்கேயே நிறுத்தித் தாமதப்படுத்தி வைக்க வேண்டும். அரை நாழிகை நேரம் தாமதித்தால் போதுமானது. அதற்குள் தாம் உத்தேசித்த காரியம் நிறைவேறி விடும்......

கோட்டை வாசலுக்கும் மாளிகை முகப்புக்கும் நடுவில் இருந்த நிலா முற்றத்தின் நடுவில் சென்று சம்புவரையர் கம்பீரமாக நின்றார். அவர் கையிலே கூரிய வாள் மின்னியது. அவருக்குப் பின்னால் ஏழெட்டு வீரர்கள் நெடிய வேல்களைப் பிடித்துக் கொண்டு நின்றார்கள். அவர்களில் சிலர் கையில் தீவர்த்தி வெளிச்சம் வைத்துக் கொண்டிருந்தார்கள்.

வாசற் கதவுகளை உடைத்துத் தகர்த்துக் கொண்டு முன்னால் வந்த வீரர்களைத் தொடர்ந்து திருக்கோவலூர் மலையமானும் பார்த்திபேந்திரனும் வந்தார்கள்.

நிலா முற்றத்தின் நடுவில் நின்ற சம்புவரையரைப் பார்த்து விட்டுப் பார்த்திபேந்திரன் மலையமானுக்கு அவரைச் சுட்டிக் காட்டினான். இருவரும் சம்புவரையரை நோக்கி வந்தார்கள்.

அருகில் வரும்போதே மலையமான், "சம்புவரையரே! இது என்ன நான் கேள்விப்படுவது? அத்தகைய பாதகத்தையும் செய்வீரா? ஓகோ! இது என்ன? கையில் வாளுடன் நிற்கிறீரே? உமது உத்தேசம் என்ன?" என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

"அந்தக் கேள்வியை உங்களிடம் கேட்கத்தான் நிற்கிறேன். உங்கள் உத்தேசந்தான் என்ன? வாசற் கதவைத் தகர்த்துக் கொண்டு வந்ததின் நோக்கம் என்ன? சற்று முன்னால் நான் வந்து தங்களை அழைத்தேன். நாளைக்கு நல்ல வேளை பார்த்துக் கொண்டு வருவதாகச் சொன்னீர்கள் ......"

"சம்புவரையரே! நல்லவேளை இப்போதே வந்து விட்டது. அதனாலேதான் வந்தேன். ஆதித்த கரிகாலன் எங்கே? வீரபாண்டியன் தலைகொண்ட வீராதி வீரன் எங்கே? சேவூர்ப் போர்க்களத்தின் வெற்றி வீரன் எங்கே? என் பேரன் எங்கே?" என்று மலையமான் கேட்டார்.

"என்னைக் கேட்டால், எனக்கு என்ன தெரியும்? இளவரசருக்கு இஷ்டப்பட்ட இடத்தில் அவர் இருப்பார். அந்த முரட்டுப் பிள்ளையிடம் நான் எவ்விதப் பேச்சு வார்த்தையும் வைத்துக் கொள்வதில்லை யென்றுதான் முன்னமே தங்களிடம் சொன்னேனே? பார்த்திபேந்திரனுக்கும் அது தெரிந்த செய்திதான்!"

"அடே சம்புவரையா! இவ்வாறு வீண் சாக்குப் போக்குச் சொல்லி ஏமாற்றப் பார்க்காதே! ஆதித்த கரிகாலனை உடனே கொண்டு வந்து எங்களிடம் ஒப்புவித்து விடு! இல்லா விட்டால், உன்னுடைய இந்தக் கோட்டை கொத்தளம் மாளிகை எல்லாவற்றையும் இடித்துத் தகர்த்து மண்ணோடு மண்ணாக்கி விடுவேன்!" என்று திருக்கோவலூர் மலையமான் கர்ஜித்தார்.

"பார்த்திபேந்திரா! இந்தக் கிழவன் என்ன பிதற்றுகிறான்? இவனுக்குத் திடீரென்று பைத்தியம் பிடித்து விட்டதா? இளவரசரைக் கொண்டு வந்து இவனிடம் ஒப்புவிப்பதற்கு நான் யார்? இவன்தான் யார்? இளவரசரை நான் சிறைப்படுத்தி வைத்திருக்கிறேனா? அல்லது இவன் இளவரசரைச் சிறைப்பிடித்துக் கொண்டு போகப் போகிறானா?" என்றார் சம்புவரையர்.

பார்த்திபேந்திரன் சிறிது சாந்தமான குரலில், "சம்புவரையரே! பதறவேண்டாம்! கிழவருக்குக் கோபம் வரக் காரணம் இருக்கிறது. இதோ இந்த ஓலையைப் பாருங்கள். தாங்களே தெரிந்து கொள்வீர்கள்!" என்று கூறிச் சிறிய ஓலைத் துண்டு ஒன்றைச் சம்புவரையர் கையில் கொடுத்தான்.

அவர் அதைப் பின்னால் பிடிக்கப்பட்ட தீவர்த்தியின் வெளிச்சத்தில் நன்றாக உற்றுப் பார்த்தார்.

"இளவரசர் ஆதித்த கரிகாலரின் உயிருக்கு ஆபத்து. உடனே படைகளுடன் வந்து காப்பாற்றவும்" என்று அந்த ஓலையில் எழுதியிருந்தது.

அதைப் படிக்கும் போதே சம்புவரையர் முகமெல்லாம் வியர்த்தது. முன்னர், கரிகாலனுடைய சடலத்தைக் கண்டதும் அவருடைய உடல் நடுங்கியது போல் இப்போதும் ஆடி நடுங்கியது.

"இது என்ன சூழ்ச்சி! இது என்ன சதி? யார் இப்படி ஓலை எழுதியிருக்க முடியும்?" என்று தடுமாறினார்.

"ஓலை யார் எழுதினால் என்ன? ஆதித்த கரிகாலரை உடனே இவ்விடம் அழைத்து வா! அல்லது அவர் இருக்கு மிடத்துக்கு எங்களை அழைத்துப் போ! இல்லாவிடில், என் வீரர்களை விட்டுத் தேடச் சொல்லட்டுமா?" என்று கேட்டார் மலையமான்.

"ஆகட்டும், ஐயா! கரிகாலர் இருக்குமிடத்துக்கு உங்களை அழைத்துப் போகிறேன். பார்த்திபேந்திரா! உனக்கு அந்த இடம் தெரியும். பழுவூர் இளைய ராணியின் அந்தப்புரத்துக்குப் போயிருக்கிறார் என்று சற்று முன் அறிந்தேன். அங்கே இவரை நீயே அழைத்துப்போ!" என்றார் சம்புவரையர்.

பார்த்திபேந்திரன், "ஆம், தாத்தா! வாருங்கள்! நானே உங்களை அழைத்துப் போகிறேன்!" என்றான்.

இப்படிச் சொல்லிவிட்டுப் பார்த்திபேந்திரன் பழுவூர் இளையராணி நந்தினி தங்கியிருந்த அந்தப்புரம் இருந்த திக்கை நோக்கினான்.

"ஐயோ! இது என்ன?" என்று அலறினான். ஏனெனில், அவன் பார்த்த திக்கில் அப்போது தீ கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. தீயின் கொழுந்துகளுக்கு மேலே கரிய புகை மண்டலம் அடர்ந்திருந்தது.

அவன் பார்த்த திசையை எல்லாரும் பார்த்தார்கள். "தீ! தீ!" என்ற பீதி நிறைந்த ஒலி எல்லாருடைய கண்டங்களிலிருந்தும் கிளம்பியது.

பார்த்திபேந்திரன் சிறிது திகைப்பு நீங்கியவனாய், "சம்புவரையரே! முதலில் இந்த ஓலையை நான் நம்பவில்லை. இப்போது நம்புகிறேன். ஏதோ சூழ்ச்சியும் சதியும் நடந்திருக்கின்றன. — பாட்டா! இந்தச் சதிகாரர்களை உடனே சிறைப்படுத்தச் சொல்லுங்கள்! நான் போய் இளவரசர் இருக்குமிடத்தைப் பார்த்துத் தேடி அழைத்து வருகிறேன்!" என்று சொன்னான்.

சம்புவரையர் மறுபடியும் பழைய தைரியமான குரலில், "ஆமாம், பார்த்திபேந்திரா! சூழ்ச்சியும் சதியும் நடந்திருக்கின்றன. ஆனால் செய்தவர்கள் நீங்கள். என் அரண்மனையின் கதவைத் தகர்த்துக் கொண்டு புகுந்தீர்கள். உங்கள் வீரர்களை ஏவிவிட்டுத் தீ வைக்கும்படி சொல்லி யிருக்கிறீர்கள். இளவரசருக்கு ஏதேனும் ஆபத்து என்றால், அதுவும் உங்களாலேதான் நேர்ந்திருக்க வேண்டும்! ஜாக்கிரதை! இதற்கெல்லாம் பழிக்குப் பழி வாங்கும் காலம் வரும்!" என்றார்.

பார்த்திபேந்திரன் அவருடைய வார்த்தைகளைப் பொருட்படுத்தாமல் ஓடினான்.

அதே சமயத்தில் சம்புவரையர் வீட்டுப் பெண்கள் கும்பலாக மாளிகைக்குள்ளே யிருந்து நிலா முற்றத்துக்கு வந்தார்கள். அவர்களுடைய மனக் கலக்கத்தை அவர்கள் முக பாவங்கள் வெளிப்படுத்தின. ஆனால் யாருடைய குரலிலிருந்தும் ஒரு சிறு முனகலாவது விம்மலாவது கேட்கவில்லை.

அவர்களில் சிலருடைய கவனம் மாளிகையின் பின்புறத்தில் வெளிச்சமாகத் தெரிந்த இடத்திற்குச் சென்றது. ஒருவரை யொருவர் சுட்டி அழைத்துக் கொழுந்து விட்டெரிந்த தீச்சுடரைக் காட்டினார்கள். மணிமேகலையும் அதைப் பார்த்தாள். உடனே "ஐயோ! தீ! தீ! அவர் அங்கு இருக்கிறாரே!" என்று அலறிக்கொண்டு அந்தத் திக்கை நோக்கி ஓடத் தொடங்கினாள். சம்புவரையர் குறுக்கிட்டு அவளை நிறுத்தினார். அவளுடைய முகத்தில் பளார் என்று ஓர் அறை கொடுத்தார். பிறந்தது முதல் யாரும் தன்னை இப்படி நடத்தி அறியாதவளான மணிமேகலை, — சம்புவரையரின் கண்ணுக்குக் கண்ணான செல்லப் பெண் மணிமேகலை, — தந்தையை வெறித்து நோக்கிய வண்ணம் ஸ்தம்பித்து நின்றாள்.

சம்புவரையர் சிறிது இரங்கிய குரலில், "அசட்டுப் பெண்ணே! உனக்குத்தான் முன்னமே நான் எச்சரிக்கை செய்திருந்தேனே? ஏன் எனக்குக் கோபம் வரச் செய்கிறாய்?" என்று கூறிவிட்டு, "அதோ பார்! நீ அலறி அடித்துக் கொண்டு ஓடவேண்டிய அவசியம் இல்லை என்பதைத் தெரிந்து கொள்!" என்றார்.

சம்புவரையர் சுட்டிக் காட்டிய திசையிலிருந்து வந்தியத் தேவன் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்து கொண்டிருந்தான். அவனுடைய தோளின் பேரில் ஆதித்த கரிகாலரின் உயிரற்ற உடலைச் சாத்தி எடுத்துக் கொண்டு வந்தான்.

சம்புவரையருக்கும் அவருடைய மகளுக்கும் நடந்த விவாதத்தில் கவனம் செலுத்திய மலையமானும் இப்போது வந்தியத் தேவனை நோக்கினார். அவன்

மெள்ள மெள்ளத் தள்ளாடி வருவதை யும், அவனுடைய தோளில் யாரையோ தூக்கிக் கொண்டு வருவதையும் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றார். ஏனோ அவருடைய முதுமைப் பிராயம் அடைந்த உடம்பு நடுங்கியது. உள்ளத்தில் ஒருவிதத் திகில் உண்டா யிற்று. கிட்ட நெருங்கி வந்தவனைப் பார்த்து ஏதோ கேட்க விரும்பினார். ஆனால் நா எழவில்லை; தொண்டை அடி யோடு அடைத்துக் கொண்டு விட்டது.

வந்தியத்தேவன் மலையமானைப் பார்த் துக் கொண்டே அவர் அருகில் வந்தான்.

"ஐயா! இதோ இளவரசர் கரிகாலர்! வீரபாண்டியன் தலை கொண்ட இந்த வீராதி வீரரை உயிரோடு தங்களிடம் கொண்டு சேர்க்க என்னால் இயலவில்லை. உடலை மட்டும் தீக்கிரையாகாமல் கொண்டு சேர்த்தேன். விதியினாலும் சதியினாலும் கொல்லப்பட்ட உங்கள் பேரப் பிள்ளையை இனி நீங்கள் ஒப்புக் கொள்ளுங்கள்!" என்று கூறிவிட்டு வந்தியத்தேவன் இளவரசர் கரிகாலரின் சடலத்தை மெதுவாகக் கீழே இறக்கிப் படுக்க வைத்தான்.

உடனே தடால் என்று தானும் கீழே விழுந்து நினைவிழந்தான்.

கிழவர் மலையமான் இளவரசரின் உட லுக்கு அருகில் உட்கார்ந்தார். அவ ருடைய வீரத் திருமுகத்தைச் சற்று நேரம் உற்று நோக்கினார். திடீரென்று மலை குலுங்குவது போல் அவருடைய உடம்பெல்லாம் குலுங்கி அசைந்தது! அலைகடலின் பேராரவாரத்தைப் போல் அவருடைய தொண்டையிலிருந்து "ஐயோ!" என்ற சோகக் குரல் வந்தது.

தம் இரும்பையொத்த முதிய கைகளி னால் தலையிலும் மார்பிலும் மாற்றி மாற்றி அடித்துக் கொண்டார்.

"என் செல்வமே! உன்னை மணக் கோலத்தில் பார்க்க வந்தேனே! பிணக் கோலத்தில் பார்க்கிறேனே!" என்று எட்டுத் திசையும் கிடுகிடுத்து நடுங்கும் படியாக அலறினார்.

பின்னர், அம் முது பெருங் கிழவர் ஆதித்த கரிகாலன் பிறந்ததிலிருந்து நடந்த சம்பவங்களை ஒவ்வொன்றாகக் கூறிப் புலம்பினார். அவன் பிறந்த நாளில் நடத்திய கொண்டாட்டங்களைக் குறிப் பிட்டார். அவன் குழந்தையாயிருந்த போது தமது மடியிலும் கரங்களிலும் தோள்களிலும் கொஞ்சி விளையாடி யதைச் சொல்லி அழுதார். அவனுக்கு வேல் எறியவும் வாள்பிடித்துச் சண்டை செய்யவும் தாம் கற்றுக் கொடுத்ததை யெல்லாம் சொன்னார். பதினாறுவது பிரா யத்தில் சேவூர்ப் போர்க் களத்தில் அவன் நிகழ்த்திய அஸகாய சூரத்தன மான வீர பராக்கிரமச் செயல்களை ஒவ் வொன்றாகக் கூறித் துக்கித்தார்.

"ஐயோ! பாண்டியனோடு நடத்திய அந்த வீரப் போர்களிலே நீ இறந்து வீர சொர்க்கம் அடைந்திருக்கக் கூடாதா? இந்தச் சண்டாளன் சம்புவரையனும் இவனுடன் சேர்ந்த சதிகாரர்களும் செய்த சூழ்ச்சிக்கு இரையாகியா மாண் டிருக்க வேண்டும்? அந்தோ! உன்னை நானே இவன் விருந்தாளியாகப் போகும் படி சொல்லி அனுப்பினேனே? எனக்கு வயதாகி விட்டது, உனக்கு இங்கே நண்பர்கள் வேண்டும் என்று எண்ணி, இவன் மகளை நீ மணந்து கொண்டால் உன் கட்சியில் இருப்பான் என்று நம்பி அனுப்பினேனே? சம்புவரையன் மாளி கைக்கு அனுப்புவதாக எண்ணிக் கொண்டு யமனுடைய மாளிகைக்கு விருந்தாளியாக அனுப்பி விட்டேனே? நான் அல்லவோ பாதகன்? நான் அல் லவோ உன்னைக் கொன்றவன்?" என்று கூறி மீண்டும் மீண்டும் தம் தலையிலே அடித்துக் கொண்டார்.

பின்னர் திடீரென்று சோகத்திலிருந்து விடுபட்டு ரௌத்திராகாரம் அடைந்து சுற்று முற்றும் பார்த்தார். "அடே சம்புவரையா! உண்மையைச் சொல்! இளவரசர் எப்படியடா மாண்டார்? என்ன சூழ்ச்சியடா செய்தாய்? தேவேந் திரனே வந்து எதிர்த்தாலும் நேருக்கு நேர் நின்று அவனை வென்றிருக்க முடி யாதே? எத்தனை பேரை அவன்பேரில் ஏவிவிட்டாய்? அவர்கள் எங்கே மறைந் திருந்து எப்படியடா இந்த வீராதி வீரனைக் கொன்றார்கள்? உண்மையைச் சொல்லி விடு!" என்று கர்ஜித்தார்.

சம்புவரையரும் கோபத்தோடு, "கிழவா! உன் முதுமைப் பிராயத்தை முன்னிட்டுப் பொறுத் திருக்கிறேன். இளவரசர் எப்படி இறந்தார் என்று உனக்கு எவ்வளவு தெரியுமோ, அவ் வளவுதான் எனக்கும் தெரியும்! இள வரசர் சடலத்தைத் தூக்கிக் கொண்டு வந்தானே, அவனைக் கேட்டால் ஒரு வேளை சொல்லுவான்! என்னைக் கேட் பதில் என்ன பயன்?" என்றார்.

"அடே! உன்னுடைய மாளிகையில் உன்னுடைய விருந்தாளியாக இருக்கும் போது இச்சம்பவம் நேர்ந்திருக்கிறது. நீ ஒன்றும் அறியாதவன் போலப் பேசுகிறாய். இதையார் நம்புவார்கள்? நல்லது; உன்னைச் சுந்தர சோழ சக்கரவர்த்தி கேட்கும் போது இந்த மறுமொழியை அவரிடம் சொல்லு! வீரர்களே! இந்தச் சம்புவரையனையும் சிறைப் படுத்துங்கள். இவனுடைய மாளிகை, மதில் சுவர் எல்லாவற்றையும் இடித்துத் தரையோடு தரை ஆக்குங்கள்!" என்று கிழவர் இடி முழக்கம் போன்ற குரலில் கட்டளை யிட்டார்.

அப்போதுதான் திரும்பி வந்திருந்த பார்த்திபேந்திரன் மலையமானைப் பார்த்து "ஐயா! இந்த மாளிகையை அழிக்கும் பொறுப்பு நமக்குக் கிடையாது. அக்னி பகவான் அந்த வேலையை மேற்கொண்டு விட்டார்! அதோ பாருங்கள்!" என்றான்.

மலையமான் பார்த்தார். அந்தப் பெரிய மாளிகையில் ஒரு மூலையில் சற்று முன் காணப்பட்ட தீ வெகு சீக்கிரமாகப் பரவி வருவதைக் கண்டார். பிரம்மாண்டமாக வளர்ந்து வானளாவிக் கொழுந்து விட்டெரிந்த அப் பெருந் தீ மாட கூடங்களையும், மச்சு மெத்தைகளையும், கோபுரம் கலசங்களையும் விழுங்கிப் பஸ்மீகரம் செய்து கொண்டு மேலும் மேலும் இரை தேடி அதன் ஆயிரம் பதினாயிரம் செந்நாக்களை நீட்டிக் கொண்டு விரைந்து வருவதைக் கண்டார். அந்தக் கோர பயங்கரமான காட்சியைப் பார்த்த வண்ணமாகத் திருக்கோவலூர் வீரர்கள் பிரமித்து நிற்பதையும் கண்டார்.

"சரி! சரி! அக்னி பகவான் நமது வேலையை ஏற்றுக் கொண்டு விட்டார். நல்லது. பார்த்திபேந்திரா! உடனே புறப்படுவோம். மூன்று உலகமாளும் சுந்தரசோழ சக்கரவர்த்தி தமது மூத்த மகனைப் பார்க்க வேண்டும் என்று மூன்று வருஷமாகச் சொல்லி அனுப்பிக் கொண்டிருந்தார். என் மகள் வானமாதேவி இளவரசனை அழைத்து வரும்படி எனக்குச் சிபார்சு மேல் சிபார்சு அனுப்பிக் கொண்டிருந்தாள். உயிரற்ற இளவரசனின் சடலத்தையாவது அவர்கள் கடைசி முறை பார்க்கட்டும். இந்த வீராதி வீரனுடைய உடலைச் சண்டாளன் சம்புவரையனுடைய மாளிகையை விழுங்கிய அக்கினிக்கு நாம் இரையாக்க வேண்டாம். தஞ்சாவூருக்கு எடுத்துச் செல்வோம். சக்கரவர்த்தியின் சந்நிதானத்தில் கொண்டு போய்ப் போடுவோம். உயிர்க் களையிழந்த திருமுகத்தையாவது பெற்ற தாயும் தகப்பனும் பார்த்துப் புலம்பட்டும். இளவரசனைக் கொன்ற சண்டாளப் பாதகர்களுக்குத் தக்க தண்டனை சக்கரவர்த்தியே விதிக்கட்டும்!" என்றார் மலையமான்.

## வைத்தியக் கண்காட்சி

அதிசயங்களில் எல்லாம் அதிசயம் மனித தேகம். மனித உறுப்புக்கள் எப்படி இயங்குகின்றன, எப்படி வேலை செய்கின்றன என்பதையெல்லாம் பல நூற்றாண்டுகளாக ஆராய்ந்து ஆராய்ந்து இன்று அது ஒரு மாபெரும் சாஸ்திரமாக விளங்குகிறது. மேலும் இந்த உடலுக்கு எப்படியெல்லாம் நோய்களும் நொடிகளும் வருகின்றன, அவற்றை எப்படியெல்லாம் தடுக்கலாம், தற்கால சஸ்திர சிகிச்சை முறைகளை எப்படியெல்லாம் நம் வைத்தியர்கள் கையாளுகிறார்கள் ஆகிய விஷயங்கள் யாவருக்கும் தெரிந்திருப்பதற்கு வசதி கிடையாது.

இப்பொழுது சென்னை வைத்தியக் கல்லூரி மாணவர்கள் நடத்தும் "வைத்தியக் கண்காட்சி" படித்தவர்களுக்கும் பாமரர்களுக்கும் உடல் கூறைப் பற்றியும் நோய் நொடிகள் வராமல் பாதுகாத்துக் கொள்ளக் கூடிய முறைகளைப் பற்றியும் தெரிந்து கொள்ள வசதியளிக்கிறது.

மேற்படி கண்காட்சியைப் பார்வையிட்ட நம் முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் இந்தக் காட்சியை ஏற்பாடு செய்தவர்களைப் பெரிதும் பாராட்டினார்.

பொதுஜன விருப்பத்துக்கு இணங்க அறிவூட்டும் இந்த அற்புதக் காட்சியை 27உ ஞாயிற்றுக்கிழமை வரை திறந்து வைத்திருக்கிறார்கள். ஆறணா நுழைவுக் கட்டணம் செலுத்தி இக் கண்காட்சிக்கு விஜயம் செய்பவர்கள் பல அரிய விஷயங்களைத் தெரிந்து கொள்வதுடன், வைத்தியக் கல்லூரி மாணவர்களின் கிராம வைத்திய உதவி நிதிக்கு உதவினோம் என்ற திருப்தியும் அடையலாம்.

# ஆராய்ந்தறிந்தோர் உபயோகிக்கும் சோப்

பொறுக்கி எடுக்கப்பட்ட புஷ்டியளிக்கும் தாவர எண்ணெய்களையும் இதர மூலங்களையும் சேர்த்து புகழ்வாய்ந்த சிறந்த முறையில் பிரத்தியேகமாக திறம்பட தயாரிக்கப் பட்டது. இந்த **மிகப் பெரிய** டாய்லட் சோப்பின் அழகு தரும் நுரை அகலாத இனிய வாசனையை அளிக்கிறது.






## ஞாபகமிருக்கட்டும்

இவ்வழகு சோப், விஞ்ஞான விதிப்படி பரிசுத்த முள்ளதென்றும், நற்பலனை அளிக்க வல்லதென்றும் ருசுவாக்கப் பட்டது. பார்ப்பதற்கு பளிங்கைப்போல் தோன்றும் சில சோப்புகள் தவறுதலாக பரிசுத்த முள்ளவை என்று கருதப் படுகின்றன. ஆனால் அத்தகைய தெளிவும் பளபளப்பும் பரிசுத்தம் அல்லது ரகத்தின் சின்னங்களல்ல.

இதர **கோத்ரெஜ்**
உயர்ந்த ரக சரக்குகள்

ஹேர் டானிக்—ஓடகோலோன்—ஷேவிங் ஸ்டிக்—சலவை சோப் (தூள்கள்) — சோப்பெடல்ஸ் (ப்ளேக்குகள்).

**வேறு தினுசு வாசனையை விரும்புகிறவர்கட்கு**

**கோத்ரெஜ் நே. 2**

யு. எஸ். பீரோ ஆப் ஸ்டாண்டர்ட்ஸின் சுற்றறிக்கை: "சோப்பு விதிகளும் அவைகளின் பரிசோதனை முறைகளும்."

**கோத்ரெஜ் சோப்ஸ், லிட்.**

மெம்பர்: **இந்தியன் சோப் அன்டு டாய்லட்ரீஸ் மேகர்ஸ் அஸோஸியேஷன்**

# தமிழ்க் களஞ்சியம்

டி. கே. சி.

## 36. பாண்டி நாட்டில் தமிழ்க் கவி!

தமிழ்க் கவியின் அற்புதப் பண்பு எப்படியோ பாண்டி நாட்டில் வளர்ந்தேறி வந்திருக்கிறது என்பது நமக்குத் தெரிகிறது. பொதிகை மலையிலுள்ள அகஸ்தியர் தமிழ்ப் பண்பை வளர்த்து வந்தார். பிறகு அதை ஒட்டியே பாண்டியனும் தமிழ்ச் சங்கத்தின் மூலமாக வளர்த்து வந்தான்.

அத்தனை கவி வளம் சோழ நாட்டில் இல்லைதான் அந்தக் காலத்தில்.

* * *

சோழ நாட்டில் இருந்த புலவர் ஒருவர். சோழ நாட்டு வளங்களை எல்லாம் அனுபவித்தவர் பாண்டி நாட்டுக்கு வந்தார். பல இடங்களுக்குப் போனார். புண்ணிய ஸ்தலங்களுக்குப் போனார். திருவிழாக்களைக் கண்டு அனுபவித்தார். பல பிரபுக்கள் இடத்திலும் போய் உறவாடினார். பல புலவர்களோடும் உறவாடினார். அரிய அரிய கவிகளை ஆங்காங்கு கேட்டு பைத்தியமே கொண்டார். பிறகு பாண்டியனையும் பார்த்தார். பாண்டியனைப் பார்த்துச் சொல்லுகிறார்:

முதலில் சோழ நாட்டிலுள்ள சிறப்புகளைப் பற்றிப் பேசுகிறார்.

(1) நல்லம்பர் என்பதாக ஒரு ஊர் இருக்கிறது. அந்த ஊரில் பத்துப் பதினைந்து பண்ணையார்கள் இருக்கிறார்கள். செல்வவான்கள் எல்லாரும். விருந்தோம்பலில் அவர்களுக்குள் கடும் போட்டி என்றுதான் சொல்ல வேண்டும். புலவர்களை ஆதரிப்பதில் ஒரே உத்ஸாகம். ஆதரிக்கப் புலவர் இல்லை என்றால் கஷ்டம்.

**நல்லம்பர் நல்ல**
**குடிஉடைத்து**

(2) சித்தன் வாழ்வு என்பதாக ஒரு ஊர். நல்ல விவசாயிகள். ஏராளமான வருவாய் உள்ளவர்கள் பலர்.

அவர்களால் அக்கம் பக்கத்திலுள்ளவர்களுக்கு எத்தனையோ விதத்தில் உதவி.

அந்தக் காலத்தில் நெருப்புப் பெட்டி என்பது கிடையாது. சில பேருக்குத்தான் சிக்கி முக்கிக் கல் வைத்து நெருப்பு உண்டாக்கத் தெரியும். உண்டாக்கின நெருப்பைக் கொண்டு அடுப்பில் நித்தியமாக நெருப்பைப் பாதுகாத்து வைத்திருப்பார்கள். பெரிய வளமான குடும்பங்களில்தான் அப்படி நெருப்பைப் பாதுகாத்து வைத்திருப்பார்கள். சாமான்யமான வீட்டுக்காரர்கள் காலையில் வந்து வறட்டி ஒன்றில் ஒரு கங்கை எடுத்துப் பொதிந்து வீட்டுக்குக் கொண்டு போவார்கள். அந்த நெருப்பைக் கொண்டு அடுப்பு மூட்டிச் சமையல் செய்வார்கள். இது காலையில் காண்கிற காட்சி. அப்படியே மத்தியானமும் வந்து நெருப்பை எடுத்துக் கொண்டு போவார்கள். சாயங்காலமும் எடுத்துக் கொண்டு போவார்கள்.

சாதாரண ஊர்களில் ஒன்றிரண்டு வீடுகளில்த்தான் இப்பேர்ப்பட்ட வினியோகத்துக்கு என்று நெருப்பைப் பாதுகாத்து வைத்திருப்பார்கள்.

சித்தன் வாழ்வு என்ற ஊரிலோ (சோழ நாடு) எத்தனையோ வீடுகளில் இந்த நெருப்பு வினியோகம் நடக்கும்.

**சித்தன் வாழ்(வு)**
**இல்லந் தோறும்மூன் (று)**
**எரிஉடைத்து**

(3) நல்லரவம் என்பதாக ஒரு ஊர். அங்கே சங்கீதத்தைப், பழமையான சங்கீதத்தை நன்றாய் வளர்த்து வைத்திருந்தார்கள். ஆயிரக் கணக்கான வருஷமாக வளர்த்து வந்தார்கள் என்று சொன்னால் மிகை யல்ல.

**— நல்லரவம்**
**பாட்டுடைத்து**

சோழ நாட்டுக் காரியம் இப்படி மூன்று காரியங்களோடு முடிந்தது.

பாண்டியனுடைய சந்திர வம்சத்தைக் குறித்து ஒரு பாராட்டுப் பாராட்டிவிட்டுப் பாண்டி நாட்டுக்கு வருகிறார் புலவர் — சோழ நாட்டுப் புலவர்.

இனிப் பாடலைப் பார்க்கலாம்.

**நல்லம்பர் நல்ல**
**குடிஉடைத்து ; சித்தன்வாழ்(வு)**
**இல்லந் தொறும்மூன் (று)**
**எரிஉடைத்து - நல்லரவம்**
**பாட்டுடைத்து ; சோமன்**
**வழிவந்த பாண்டிய! நின்**
**நாட்டுடைத்து நல்ல**
**தமிழ்.**

பாண்டியனுக்கு இதைவிடப் புகழ் மாலையைச் சூடிவிட முடியாதுதானே?

# ஆம்பூரில் கல்வித் திருவிழா

வட ஆற்காடு ஜில்லாவில் புதுக் கல்வித் திட்டத்துக்கு எவ்வளவு அமோகமான ஆதரவு இருக்கிறது என்பது செப்டம்பர் 13-ந் தேதி நிதர்சனமாகத் தெரிந்தது.

ஆம்பூரில் சிறந்த முறையில் நடைபெற்று வரும் ஹிந்து ஹைஸ்கூல் வெள்ளி விழாக் கட்டடத்தைத் திறந்து வைப்பதற்காக ராஜாஜி விஜயம் செய்தார். அச் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு, புதுக் கல்வித் திட்ட ஆதரிப்பு மகாநாடு ஒன்றும் நடத்தினார்கள்.

இம்மகாநாட்டுக்கு வடாற்காடு ஜில்லாவில் கல்வித் தொண்டு செய்யும் ஆசிரியர்களும், கல்வி அதிகாரிகளும், கல்வித் துறையில் ஈடுபட்ட பிரமுகர்களும் திரளாக விஜயம் செய்திருந்தனர்.

"கிராமப் பகுதிகளில் புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்திருப்பதை நாங்கள் வரவேற்கிறோம். கல்வித் திட்டம் வெற்றிகரமாக நடக்க நாங்கள் முழுமனதுடன் ஒத்துழைக்கப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்கிறோம்" என்று வடாற்காடு பொது மக்களின் சார்பாகத் தெரிவித்த மகஜர் ஒன்று ராஜாஜியிடம் அளிக்கப்பட்டது.

மகாநாட்டுக்கு டாக்டர் சி. நாதமுனி நாயுடு எம். எல். ஸி., தலைமை தாங்கிப் புதுக் கல்வித் திட்டத்தின் சிறப்பைத் தெளிவாக எடுத்தியம்பினார்.

"சமூகத்தில் ஒதுக்கி வைக்கப் பட்டிருந்தவர்களுக்கு ஆலயப் பிரவேசத்தை அனுமதித்தது போல், புறக்கணிக்கப்பட்டு வரும் கிராமங்களிலுள்ள தச்சர், குயவர், வண்ணார் போன்ற தொழிலாளர்களுக்கு அரசாங்கக் கல்வி ஆலயம் திறந்துவிட ஏற்பாடாகி யிருக்கிறது. புதுத் திட்டத்தின் புரட்சிகரமான மாறுதல் இது" என்று ஆரம்பித்து ராஜாஜி அவர்கள் புதுக் கல்வித் திட்டத்தின் அவசியத்தைச் சிக்கலுக்கு இடமில்லாமல் தெளிவுபட எடுத்துரைத்தார்.

புதுக் கல்வித் திட்டத்தை ஆதரித்து, கல்வி இலாகா டிபுடி டைரக்டர் ஸ்ரீ கந்தரவடிவேலு, கல்வித் துறையில் முப்பது வருஷ அநுபவமுள்ள சி. துரைசாமைய்யா, வாணியம்பாடி இஸ்லாமியா கல்லூரி ஆங்கிலப் பேராசிரியர் கே. சீதாராம், வேலூர் முனிஸிபல் கமிஷனர் ஸ்ரீ முத்து ராமலிங்கம் முதலிய பல அறிஞர்களும், ஆசிரியர்களும் தெளிவாகப் பேசினார்கள்.

முடிவில் புதுக் கல்வித் திட்டத்தை ஏக மனதாக ஆதரிக்கும் தீர்மானம் ஒன்று நிறைவேறியது.

---










1. ஆம்பூரில் செப்டம்பர் 13உ நடைபெற்ற கல்வித் திருவிழா நிகழ்ச்சிகளுக்குக் காரண புருஷரான டாக்டர் நாதமுனி நாயுடு எம். எல். ஸி. ராஜாஜியை வரவேற்று அழைத்துச் செல்கிறார். 2. கல்வி மகா நாட்டுக்குத் தலைமை வகித்த டாக்டர் நாதமுனி நாயுடு எம். எல். ஸி. கல்வித் திட்டத்தை ஆதரித்துத் தமது தலைமைப் பிரசங்கத்தை நிகழ்த்துகிறார். 3. மகாநாட்டில் கூடியிருந்த அறிஞர் பெரு மக்கள். 4. புதிய கல்வித் திட்டம் பாட்டாளி மக்களை உயர்த்தும் புரட்சிகரமான திட்டம் என்பதை ராஜாஜி விளக்குகிறார். 5. ஸ்ரீ முருகேசன் கையெழுத்தினால் எழுதி அளித்த வரவேற்புப் பத்திரத்தைப் பெற்றுக் கொண்டு ராஜாஜி அதைப் பெரிதும் பாராட்டினார் 6. ஆசிரியர்களும், அறிஞர்களும் அடங்கிய மகா சபையில் மற்றொரு பகுதி. 7. ஆம்பூர் இந்து ஹைஸ்கூலில் ராஜாஜி அவர்கள் திறந்து வைத்த காந்தி மகாத்மாவின் உருவச் சிலை.



# வாழ்க்கையே தியாகம்

நீதிபதி ஏ. எஸ். பி. அய்யர்

4

திவான்பகதூர் மன்னன் காட்டி என்பவர் அந்த வட்டாரத்தில் ஒரு பிரமுகர். அவரைக் கொண்டு வந்து இந்தக் கட்டிடத்தைத் திறக்கச் செய்ய வேண்டும் என்று வைத்தியும், மன்னன் காட்டியின் சுற்றுத் தேவதைகள் சிலரும் கடைசி நிமிஷத்தில் ஏற்பாடு செய்தனர். திவான்பகதூர், தமது வாழ்நாளில் இதுகாறும் ஒரு ஆத்மாவுக்காகிலும் ஒரு பிடி அன்னம் அளித்து உதவாத போனாலும், 'திறந்து வைக்க வேண்டும்' என்றவுடன் அவர் உச்சி குளிர்ந்து விட்டது. அவரும் திறந்து வைக்க ஒப்புக் கொண்டு விட்டார். வைத்தியும், லட்சுமி தேவிக்கும் கிருஷ்ணமூர்த்திக்கும் ஏமாற்றம் உண்டாக்கும் வகையில் தாம் ஒரு காரியம் ஏற்பாடு செய்து விட்டதில் பெரும் திருப்தியடைந்தான். கிருஷ்ணமூர்த்தி மிகவும் அடக்கமானவன் என்பது வைத்திக்குத் தெரியும். கட்டிடத்தைத் திறந்து வைக்க முடியாமற் போனது குறித்து வருத்தப்பட மாட்டான் என்பதும் தெரியும். ஆனால் அவன் ஏற்பாடு செய்திருந்த வெள்ளிக்கிழமை அன்று மாலை ஐந்து மணிக்குக் கட்டிடத்தின் திறப்பு விழாச் செய்து லட்சுமி தேவியைத் திடுக்கிடச் செய்ய வேண்டும் என்று திட்டமிட்டிருந்தான். அது மட்டுமல்ல, கட்டிடத்துக்கு 'மன்னன் காட்டிக் கட்டிடம்' என்றும், குளத்துக்கு 'மன்னன் காட்டி ஸாகர்' என்றும் பெயர் வைக்க வேண்டும் என்றும் நிர்மானித்து விட்டான். இந்த எண்ணங்களையெல்லாம் மிகவும் ரகசியமாகப் பிச்சைக் குட்டி என்ற தன் நெருங்கிய நண்பனிடம் கூறினான். இந்த வைபவத்துக்கு நல்ல கூட்டம்சேர்த்து வைக்கும்படியும் அவனிடம் ரகசியமாகச் சொன்னான்.

பிச்சைக் குட்டிக்கு உள்ளத்துக்குள் நீண்ட நாட்களாகத் திவான் பகதூரின் மீது ஒரு வெறுப்பு உண்டு. ஏனெனில் ஒரு சமயம் கோடை காலத்தில் ஊரிலிருந்த அத்தனை குளங்களும் கிணறுகளும் வறண்டு விட்டன. திவான்பகதூர் வீட்டுக் கிணற்றில் மட்டிலும் தான் தண்ணீர் இருந்தது. அந்தக் கிணற்றில் தண்ணீர் எடுக்கச் சென்ற போது, "ஊரிலிருக்கிற பிச்சைக்காரப் பசங்களுக்காக நான் இங்கே கிணற்றை வெட்டி வைக்கவில்லை" என்று அலட்சியமாகப் பேசினார். ஆம். அதே திவான்பகதூர் சிறு வயதில், வறுமையில் உழன்ற போது இதே பிச்சைக் குட்டியினிடம் உடைந்த சிலேட்டுத் துண்டுகளுக்கு யாசகம் புரிந்தது, இன்னும் மறக்கவில்லை!

அப்பொழுதிலிருந்தே பிச்சைக் குட்டிக்குத் திவான் பகதூரின் மீது ஒரு கண்தான். இப்பொழுது பழி தீர்த்துக்கொள்ளச் சந்தர்ப்பம் வாய்க்கவே, பிச்சைக் குட்டி அடைந்த சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல. லட்சுமி தேவியினிடம் விழுந்தடித்துக் கொண்டு ஓடிப்போய், அவரைத் தனியாகக் கூப்பிட்டு இந்த ரகசியத்தைக் கூறினான். மேலும் வைத்தி குறிப்பிட்டிருக்கும் அந்தத் தேதியிலேயே கிருஷ்ணமூர்த்திதான் திறந்து வைக்கப் போகிறான் என்று ஒரு நோட்டீஸ் அச்சடித்து ஊர் எல்லாம் வழங்கச் சொன்னான். இப்படித் தான் வந்து சொல்லி விட்டுப் போனதை யாருக்கும் தெரிவிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டான்.

இதைக் கேட்டதிலிருந்து லட்சுமி தேவி ஒரு நிமிஷம் கூட சும்மா இருக்கவில்லை. நோட்டீசுகளை அச்சடிக்க ஏற்பாடு செய்தான். அவற்றைத் திறப்புவிழா ஏற்பாடு செய்யப் பட்டிருந்த அன்று மாலை நாலு மணிக்கு ஊர் எல்லாம் வழங்கவும் ஏற்பாடு செய்தான். ஜனங்களும் புதுக் கட்டிடத் திறப்பு விழாவுக்குத் திரளாக வந்திருந்தனர்.

வைத்திக்கு இந்த விவகாரங்கள் என்ன தெரியும்? பதினைந்து ரூபாய் பெறுமான முள்ள ஒரு சரிகை மாலையைத் திறப்பு விழா அன்று காலை வாங்கினான். அன்று மாலை சரியாக நாலரை மணிக்கே ஆசிரம வாசலை நோக்கி விரைந்தான். திவான்பகதூர் சரியாக ஐந்து மணிக்கு வரும்போது, இவன் முன்னின்று வரவேற்க வேண்டுமல்லவா?

தூரத்திலிருந்து, ஒரு பெரிய கூட்டம் கூடியிருந்ததைப் பார்த்து மனசுக்குள் மகிழ்ந்து கொண்டான். 'நம்ம பிச்சைக்குட்டி தான் திவான்பகதூர் திறந்து வைக்கும் செய்தியை நன்கு விளம்பரப் படுத்தி, இவ்வளவு பெரிய கூட்டத்தைக் கூட்டியிருக்க வேண்டும்' என்று எண்ணினான். அவன் எண்ணியதற்கு ஏற்றாற்போலவே, ஜனங்களின் கைகளில் நோட்டீஸ்கள் இருப்பதையும் பார்த்தான். ஒருவர் கையில் பிடித்திருந்த நோட்டீஸைக் குனிந்து படித்துப் பார்த்தான். அதில் "ஸ்ரீமான் கிருஷ்ண மூர்த்தி கட்டிடத்தைத் திறந்து வைப்பார்" என்று படித்தபோது திடுக்கிட்டு விட்டான். அதற்குள் மன்னன் காட்டியின் மோட்டார் காரும் அங்கே வந்து சேர்ந்தது. அவ்வளவுதான்! சுறுசுறுப்பான இரண்டு ஹரிஜனச் சிறுவர்கள் அவருடைய காரைத் திறந்து வரவேற்று, அவர் கையில் நிகழ்ச்சி நிரலையும் கொடுத்தார்கள். அதைப் படித்தபோது திவான் பகதூரின் முகம் கோவைப் பழம்போல் சிவந்தது. அவருக்கு ஏதோ வலிப்பு வந்து விட்டாற்போலவே தோன்றியது. "அந்த வைத்தி எங்கே? அந்த அயோக்ய சிகாமணி எங்கே? அவனைச் சொல்லிப் பிரயோஜனமில்லை. அவனைப் பெற்றவர்களைத்தான் சொல்ல வேண்டும்" என்று இரைந்து விட்டு மறுபடியும் தமது காரில் ஏறிக் கொண்டு போய் விட்டார். இதைக் கண்டு அங்கு கூடியிருந்த ஜனங்கள் எல்லாரும் அப்படியே ஒன்றும் புரியாமல் திக்பிரமை பிடித்து உட்கார்ந்திருந்தனர்.

நிகழ்ச்சி நிரலில் போட்டிருந்தபடி விழா சரியாக ஐந்து மணிக்குச் சிறுவர்களும் சிறுமிகளும் இனிய கடவுள் வாழ்த்துப் பாட ஆரம்பமாயிற்று. அடுத்தாற்போல் கிருஷ்ண மூர்த்தி தனது இருப்பிடத்தைவிட்டு எழுந்து நின்றானோ இல்லையோ, வைத்தி விழுந்தடித்துக் கொண்டு மேடைக்குப் போய்க் கிருஷ்ண மூர்த்தியின் கழுத்தில் சரிகை மாலை அணிவித்தான். ஜனங்கள் பலத்த கரகோஷம் செய்தனர். கிருஷ்ண மூர்த்தியின் நெஞ்சம் தழுதழுத்தது. அவன் கூறினான்:

"எங்கள் அடக்கமான தொண்டு கடைசியில் எங்களுக்கு வெற்றி யளித்து விட்டது! நண்பர் வைத்தி இதுகாறும் எங்கள் வேலையில் சற்றும் அனுதாபமின்றி யிருந்தார். இப்பொழுது ஸ்ரீமதி லட்சுமி தேவியவர்கள், காதியற்ற ஏழை ஹரிஜனச் சிறுவர்களுக்கு வழங்கும் நன்கொடையில் கலந்து கொண்டு விட்டார். திவான்பகதூர்கூட இந்த வைபவத்தில் கலந்து கொள்ள வந்திருந்தார். ஆனால் ஏதோ ஒரு எதிர்பாராத காரணத்தினால் அவருக்குத் திரும்பிப் போக வேண்டியதாகி விட்டது."

பிறகு கிருஷ்ணமூர்த்தி-சீதா இவர்களின் தொண்டைப் பாராட்டிப் பலர் பேசினார்கள். அவர்களில் வைத்தியும் பிச்சைக் குட்டியும் இருந்தனர். இவ்விருவரும், "தேசத்தின் முன்னேற்றம் திவான்பகதூர் பட்டங்கள் பெற்றவர்களைப் பொறுத்தும் இல்லை; சுயநலம் பிடித்தவர்களைப் பொறுத்தும் இல்லை. தேசத்துக்காகவும், மக்களுக்காகவும் இரவும் பகலும் பாடுபடும் கிருஷ்ணமூர்த்தி, சீதா போன்றவர்களைப் பொறுத்தே இருக்கிறது! இவர்களைப் போன்றவர்களால்தான் தேசம் முன்னேற முடியும்" என்று மிகவும் வன்மையாகப் பேசினார்கள். இதைக் கேட்டு அங்கே கூடியிருந்த மகாஜனங்கள் அப்படியே ஆச்சரியப் பட்டுப் போயினர்!

* *

1931-ல் நிகழ்ந்த உப்பு சத்யாக்கிரகத்தில் கலந்து கொள்ள வேண்டும் என்று கிருஷ்ணமூர்த்தி ரொம்பவும் விரும்பினான். "அந்தக் காரியம் செய்ய வேறு பலர் இருக்கின்றனர். ஆனால் இந்த ஆசிரமக் காரியம் செய்யத்தான் யாருமில்லை. ஆகவே இங்கேயே இருங்கள். இதுதான் உங்கள் கடமை; உங்கள் சுவதர்மம்" என்றாள் சீதா.

திருவிடமருதூர் பஞ்சாயத்து போர்டு உபதலைவர் தேர்தல் கூட்டம் 7-9-53 மாலை 4-30 மணிக்கு போர்டின் தலைவர் ஸ்ரீ டி. எம். ரெங்கநாதன் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் போர்டு அங்கத்தினர்களால் ஏகமனதாக ஸ்ரீ டி. ஏ. வெங்கடேசன் உபதலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.



உபாத்தியாயர் :— முத்து, உன்னை வீட்டில் ஏதாவது படம் எழுதிக் கொண்டு வரச் சொன்னேனே, எழுதிக் கொண்டு வந்தாயா ?

முத்து :—எழுதிக் கொண்டு வந்திருக்கிறேன், ஸார்! பசுமாடு ஒன்று மைதானத்தில் புல் மேய்கிற காட்சியை எழுதியிருக்கிறேன்.

உபாத்தியாயர் (கையில் படத்தை வாங்கிப் பார்த்து);— புல்லையே காணோமே!

முத்து:—மாடு அதைமேய்ந்து விட்டது, ஸார்!

உபாத்தியாயர்:-மாடு எங்கே?

முத்து :—இந்த இடத்தில் புல் இல்லையாகையினால் அது வேறு இடத்துக்குப் புல்மேயப் போய் விட்டது, ஸார்!

இதைக் கேட்டுக் கிருஷ்ணமூர்த்தி சமாதானம் அடையவில்லை. ஒருநாள் காலைப் பிரார்த்தனைக்குப் பிறகு, சத்யாக்கிரகம் புரியப் புறப்பட்டு விட்டான். ஆனால் ஆச்ரமத்துச் சிறுவர்களும் சிறுமிகளும், 'நாங்களும் வருவோம்' என்று பிடிவாதம் பிடித்தனர். அதனால் அவன் போகாமல் நின்றான்.

அன்றிரவு தனிமையில் அவன் கடவுளுக்கு அந்தரங்கமாகப் பிரார்த்தனை செலுத்தி வேண்டிக் கொண்டான். இனி தான் மேற்கொண்டு செய்ய வேண்டிய கடமை யாது என்பது பற்றி ஒரு குறிப்பு அருளச் சொல்லி வேண்டிக் கொண்டான். அவன் உள்ளத்தின் உள்ளிருந்து ஒரு குரல் "நீ இருக்கும் இடத்திலேயே இரு" என்று கூறியது. அவன் அதன் படியே நடக்கத் தீர்மானித்து விட்டான்.

சீக்கிரத்திலேயே அவனுக்கு ஆசிரமத்தை விஸ்தரிக்க வேண்டும் என்ற எண்ணம் உதித்தது. எல்லாச் சாதி சமயச் சிறுவர்களையும் சிறுமிகளையும் ஏன், ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பதுதான் அந்த எண்ணம். இதை நடைமுறையில் கொண்டு வந்தபோது இதற்குப் போதிய வரவேற்பு இருக்கவில்லை.

ஆனால் நாளடைவில் கிருஷ்ணமூர்த்தியின் பிடிவாதமும், உண்மையும் வென்றது. சில பிராம்மணப் பையன்களும், மற்ற சாதி ஹிந்துப் பையன்களும் வரலாயினர். முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் கூடத் தங்கள் சிறுவர்களை அனுப்பி வைத்தனர். ஹரிஜனச் சிறுவர்களும் வந்திருந்தனர். அந்த ஆசிரமத்துப் பிரார்த்தனைக் கூடத்தில் எல்லா நாட்டு எல்லா மொழிப் பிரார்த்தனைகளும் பாடப் பட்டன. சம்ஸ்கிருதம், ஆங்கிலம், ஆராபிக், லத்தின், இவை தவிர நம் நாட்டுப் பல மாகாண பாஷைப் பிரார்த்தனை கீதங்களும் முழங்கின. கடவுளை மௌனமாக பிரார்த்தனை செய்வதுதான் சிறந்த முறை என்று கருதியவர்களுக்கும் அங்கே இடமில்லாமற் போகவில்லை. மொத்தத்தில் சாப்பாட்டு நேரமும் பிரார்த்தனை நேரமும் ஆச்ரமத்தைப் பார்க்க மிக்க சுவாரஸ்ய மளித்தன!

ஒரு தடவை, ஒரு கடும் சம்ஸ்கிருத பண்டிதர் வந்திருந்தார். பிரார்த்தனை ஆரம்பிக்கப் போகும் சமயம். அப்பொழுது அவர் கிருஷ்ணமூர்த்தியைக் கூப்பிட்டு, "ஹரிஜனங்கள், முஸ்லிம்கள், இன்னும் வேறு சாதியினர் எதிரில் இம்மாதிரி மந்திரங்களைக் குழந்தைகள் கோஷிப்பது சரியல்ல. கடவுள் உன்னைக் கடுமையாகத் தண்டிப்பார்" என்றார்.

இதற்குக் கிருஷ்ணமூர்த்தி, "ஐயா, இப்பொழுது அந்த மந்திரங்களைச் சொல்லத்தான் போகிறேன். நான் செய்வதைக் கடவுள் ஒப்பவில்லை என்றால் என் தலையில் மரணத்தைப் போடட்டும். நான் உண்மை என்று கருதியவற்றுக்காக, என் உயிரைத் தியாகம் செய்யத் தயாராயிருக்கிறேன். ஆனால் எனக்கு ஒன்றும் நேரவில்லை எனில், கடவுள் என் காரியத்துக்கு தடை ஒன்றும் கூறவில்லை என்பதை அங்கீகரிக்க வேண்டும். அதோடு எங்களுடன் சேர்ந்து உங்கள் இனிய குரலில் மந்திரங்களைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டுக்கொண்டு,மந்திரங்களைச்சொன்னான்.

கிருஷ்ணமூர்த்தி அப்படியே மெல்ல இறந்து விழப் போகிறான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் பண்டிதர். ஆனால் ஒன்றும் நேரவில்லை. "என்ன இது?" என்று ஒரே ஆச்சரியத்துடன் கேட்டார்.

"இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. கடவுள், பிரம்ம, க்ஷத்ரிய, வைசியர்களுக்கு மட்டும் இல்லை. உலகில் படைக்கப்பட்டுள்ள அத்தனை பேருக்கும்தான் அவர் கடவுள். ஆகவே, இப்பொழுது எங்கள் பிரார்த்தனையில் நீங்களும் சேர்ந்து கொள்ளுங்கள்; நீங்களும் சொல்லுங்கள்" என்றான்.

அவர் என்ன செய்வார், பாவம்? கிருஷ்ணமூர்த்தியுடன் சேர்ந்து கொண்டார். அன்றையப் பிரார்த்தனை உண்மையிலேயே மிக அழகாகவும் சுவாரஸ்யமாகவும் இருந்தது.

தினம் எத்தனையோ பேர் இந்த ஆச்ரம நடவடிக்கைகளைப் பக்தி சிரத்தையுடன் பார்க்க வந்தனர். ஆச்ரமத்தில் குழந்தைகளுக்குப் பரிமாறப்பட்ட உணவோ சைவ உணவுதான். ஆனால் உடலுக்கும் உள்ளத்துக்கும் உறுதியும் பலமும் அளிக்கக் கூடிய உணவு அளிக்கப்பட்டது. யாவரும் ஒரே

கூடத்தில் ஒன்றாகச் சேர்ந்து அமர்ந்து சகோதரர்களைப் போல் சாப்பிட்டனர்.

இப்படி நாட்கள் சென்றன. இரண்டாவது மகாயுத்தம் வந்தது. இதனால் ஆச்ரமத்தில் பிரமாதமான மாறுதல் ஒன்றும் நேர்ந்து விடவில்லை. ஆம், ஆச்ரமம் இத்தனை ஆண்டுகளில் நன்கு வளர்ந்திருந்தது. ஆண்களும் பெண்களுமாகப் பல ஊழியர்கள் சேர்ந்திருந்தனர். பிரேமாவைத் தவிர, ஹரி, ஹரேன் என்ற இரட்டைக் குழந்தைகள் 1929-ம் வருஷம் கிருஷ்ணமூர்த்திக்குப் பிறந்து பெரியவர்களாகியிருந்தனர். ரொம்பவும் சூடிகையான சிறுவர்கள். அவர்கள் 1942-ம் வருஷம் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் மிகவும் சிறப்பாகத் தேறியிருந்தனர். ரவீந்திரநாத தாகூரின் 'ஜனகணமன' கீதமும், மற்றுமுள்ள பல பிரார்த்தனை கீதங்களும் வெகு இனிமையான குரலில் பாடி, கேட்பவர்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்டு விடுவார்கள். பிரேமா தன் தாயாரையே கொண்டிருந்தாள். இளமையும், இனிய பண் பாடும் கொண்ட 'சிறிய கீதா' என்றுதான் பிரேமாவைப் பார்ப்பவர்கள் சொல்லுவார்கள். பிரேமா 'பிரேம மந்திர'ரின் உயிரும் உணர்வுமாய் இருந்தாள். பிரேமாவை விட்டுப் பிரேம மந்திரைப் பற்றி யாராலும் நினைக்கக் கூட முடியவில்லை.

• • •

பயங்கர வங்காளப் பஞ்சம் 1942-43 ஆண்டுகளில் மூண்டது. நூற்றுக்கணக்கான பேர் கல்கத்தா தெருக்களில் பஞ்சத்தினாலும் பட்டினியினாலும் மடிந்து விழும் இதயத்தைப் பிளக்கும் விவரங்கள் தினப் பத்திரிகைகளில் வெளியாயின. இவை யாவும் உண்மையென்று தனிப்பட்டவர் எழுதும் கடிதங்கள் வேறு கூறின. ஹரியும் ஹரேனும் வங்காளத்துக்குச் சென்று பட்டினியினால் வாடும் மக்களுக்குத் தொண்டு புரிய அனுமதி தரும்படி தங்கள் பெற்றோரைக் கேட்டார்கள். கிருஷ்ணமூர்த்தி இசைந்தான். ஆனால் தானும் கூடவே வந்து, எப்படித் தொண்டு செய்ய வேண்டும் என்று காண்பித்து விட்டுத் தான் திரும்பி விடுவதாகச் சொன்னான்.

எனவே, கீதா - பிரேமா இவ்விருவரிடமும் ஆச்ரமத்தை ஒப்படைத்து விட்டு மூன்று பேரும் கல்கத்தாவுக்குச் சென்றனர். அங்கே அவர்கள் கண்ட காட்சி மிகவும் கோரமாக இருந்தது. அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்தெல்லாம் மக்கள் சாரி சாரியாக கல்கத்தாவுக்கு வந்தவண்ணம் இருந்தனர். கல்கத்தா தெருக்களில் கூட்டம் கூட்டமாக எலும்பும் தோலுமாகவும் மார்பு கூடு கட்டியும், கண்களில் ஒளியிழந்தும் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஒரு வாய்ச் சோற்றுக்காக அலைந்து கொண்டிருந்தனர். குடும்பம் குடும்பமாக, எங்கே போகிறோம், எதற்குப் போகிறோம் என்று தெரியாமலே அலைந்து கொண்டிருந்தனர். இவர்களில் பலர் குழந்தைகளை இழந்தவர்கள், பெற்றோர்களை இழந்தவர்கள், கணவன்மாரை இழந்தவர்கள், மனைவிமாரை இழந்தவர்கள். மொத்தத்தில் அவர்களை உலகத்துடனும் உயிருடனும் பிணைத்து வைக்கக்கூடிய பாசம் ஏதுமின்றி நடைப் பிணங்களாகச் சுற்றி வந்தனர். பட்டப் பகலில், தெருக்களில் 'தொப்' 'தொப்' என்று பிணங்கள் விழுந்த வண்ணமிருந்தன. இதைப்பார்க்கச் சகிக்காத மக்கள் முகத்தைத் திருப்பிக் கொண்டு, 'ராம்!' 'ராம்!' என்றனர்; அல்லது 'அல்லா! அல்லா!' என்றனர்.

கிருஷ்ணமூர்த்தியும் அவனுடைய புதல்வர்களும் போய்க் கல்கத்தாவில் இறங்கின அன்றைய இரவே வெளியே சுற்றிப் பார்க்கப் புறப்பட்டனர். அன்றையதினம் நல்ல நிலவு அடித்துக் கொண்டிருந்தது. ஆனால் சின்னச் சின்ன சந்துகளில் எல்லாம் இருள் சூழ்ந்திருந்தது. தெரு விளக்குகள் இருட்டடிப்பு காரணமாக, இருப்புக் குல்லாய்களை அணிந்திருந்தன. அதன் வழியே நேரே பூமியில் விழுந்த வெளிச்சமானது, பட்டினியால் புழுப்போல் நெளியும் மக்கள்மீது தான் விழுந்தது. ஒருவேளை தெருவழியாகப் போக நேரும் வழிப்போக்கர்களின் பார்வையைத் திருப்பத்தான் அவ்வாறு வீசியதோ அல்லது, எதிரி விமானங்கள் குண்டுபோட்டு இவர்கள் துயர வாழ்வைச் சீக்கிரம் முடித்து விடட்டுமே என்றுதான் அப்படி வெளிச்சத்தை வீசியதோ அந்தத் தெருக் கம்பங்கள்!

தெருவழியாக நடந்து சென்றபோது, கிருஷ்ணமூர்த்தியின் காலில் ஏதோ தடைப்



குற்றவாளி:—நான் பொய்க் கையெழுத்துப் போட்டு மோசம் செய்ததாகக் குற்றம் சாட்டியிருக்கிறீர்களே! என்ன அநியாயம்! என் பெயரையே எழுதத் தெரியாதே!

மாஜிஸ்திரேட்:—உன் பெயரைக் கையெழுத்துப் போட்டதற்காக உன் மீது குற்றம் சாட்டப்படவில்லை. அது வேறொருவர் கையெழுத்தாயிருந்ததுதான் குற்றம்.

பட்டது. ஹரேன், தன் கையில் டார்ச்சு விளக்கை வைத்திருந்தான். யுத்த காலத்தில் இரவு வேளையில் டார்ச்சு போடக் கூடாது. இருப்பினும் சர்வ ஜாக்ரதையாக வெளிச்சத்தைப் போட்டுப் பார்த்தான். அங்கே கண்ட காட்சி மூவரையும் திடுக்கிட வைத்தது. என்ன கோரம்! என்ன கோரம்! வறுமையால் பீடிக்கப்பட்ட தாயின் ஸ்தனங்களை உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருக்கும் குழந்தை சவைத்துக் கொண்டிருந்தது. "ராமா! ராமா! என்ன கோரம்! யுத்தம் நடக்கும் ஐரோப்பிய நாடுகளில்கூட இவ்வளவு பயங்கரமான காட்சி காண முடியாது. இந்தப் பஞ்சம், மனிதனால் ஏற்படுத்தப்பட்ட பஞ்சம்! பாரத நாட்டின் நெற்களஞ்சியம் என்று சொல்லப்படுகிற வங்காளத்தில் இவ்வளவு கோர பஞ்சம்!" என்று நொந்துகொண்டான் கிருஷ்ணமூர்த்தி.

அதற்கு மறு நாள் உள்ளூர் தர்மப் பிரபு நடத்தி வந்த இலவச உணவு விடுதிக்கு அவர்கள் போனார்கள். அங்கிருந்த ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் ஆரோக்கியமாக இருந்தனர். உணவுகூட நன்றாக இருந்தது. ஹரியும் ஹரேனும், "நாம் வேண்டுமானால் பட்டினியினால் கஷ்டப்படும் ஒரு சிலரை இங்கு அழைத்து வரலாம்" என்றனர்.

"ஆனால், அவர்கள் ஏன் இங்கு இதுவரை வரவில்லை?" என்று வியப்புடன் கேட்டான் கிருஷ்ணமூர்த்தி.

"எல்லா நற்காரியங்களும் விளம்பரமின்றி, குடத்துக்குள் விளக்குப் போல் இருந்துவிடுவது உண்டு. அதுபோல் இதுவும் இருக்கிறதோ என்னவோ? நாம் வேண்டுமானால் அந்தத் தர்மப் பிரபுவைக் கேட்போம் அவர் என்ன சொல்லுகிறார், பார்ப்போம்" என்றான் ஹரி.

"நான் நம்ப வில்லை, உணவு இலவசமாகக் கொடுக்கிறார்கள் என்றால் பட்டினியால் தவிப்பவர்களுக்கு அழைப்பு அனுப்ப வேண்டிய அவசியமே யில்லை. தேன் சிந்தியிருக்கும் இடத்துக்கும், சர்க்கரை சிந்தியிருக்கும் இடத்துக்கும் வரச் சொல்லி எறும்புக்கு அழைப்பு அனுப்புகிறோமா என்ன? அவை சாரிசாரியாக வரவில்லை. அம்மாதிரிதான் பட்டினி கிடக்கும் மக்களும்" என்றான் கிருஷ்ணமூர்த்தி.

ஹரியும் ஹரேனும், அந்தத் தர்மப் பிரபுவிடம், இன்னும் சில பட்டினிக் கூட்டத்தினரை அழைத்து வரலாமா என்று கேட்டனர். அதற்கு அவர் "ஆகா! பேஷாக அழைத்து வரலாம்! ஆனால் மேலிடத்திலிருந்து உத்தரவு வரும் வரையில் சற்றுப் பொறுத்திருங்கள்! இப்பொழுது நம்மிடம் ஒப்படைக்கப் பட்டுள்ளவர்களைப் பரிபூரணமாகக் காப்பாற்றி விடுவோம். அப்புறம் வேண்டுமானால் இன்னும் சிலரை அழைத்துக் கொள்வோம்" என்றான்.

நாள் கணக்கில் காத்திருந்தனர். ஒரு செய்தியும் வரவில்லை. பிறகு தான் அவர்களுக்கு உண்மை தெரிய வந்தது. (தொடரும்)

**பா**ரதியார் சங்கத்தின் ஆதரவில் அமரகவி பாரதியார் திருவிழா செப்டம்பர் 11, 12 தேதிகளில் சென்னை தியாகராயநகர் ஹிந்திப் பிரசார சபையில் கோலாகலமாக நடந்தது.

இவ்வாண்டு பாரதி விழாவை அன்னதானத் திருப்பணியுடன் ஆரம்பித்து நடத்தியது ஒரு விசேஷ அம்சமாகும். சுமார் ஆயிரத்து இருநூறு ஏழைகளுக்கு 11உ காலை அன்னமளிக்கப்பட்டது.

சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீ சி. ஆர். சீனுவாசன் இவ்வாண்டு விழாவுக்குத் தலைமை வகித்தார்.

பாரதியார் வாழ்க்கை சம்பந்தமான ஆதாரங்கள், படங்கள் முதலியவைகளைக்கொண்ட "பாரதி கண்காட்சி"யை நிதி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம் அவர்கள் திறந்து வைத்தார்.

பாரதியார் பாடல் போட்டியில் கலந்துகொண்டு பரிசு பெற்றவர்களுக்கெல்லாம் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் பரிசுகள் வழங்கினார்.

ஸ்ரீ முருகதாஸர் அவர்களும் பாரதியாரின் தாய் மாமன் ஸ்ரீ சாம்பசிவ ஐயர் அவர்களும் விழாவின் ஆரம்பத்தில் பாரதியாரின் கீதங்களைப் பாடிச் சபையோரைப் பரவசப் படுத்தினார்கள்.

இரண்டு நாள் விழாவிலும் ஸ்ரீமான்கள் எஸ். சச்சிதானந்தம் பிள்ளை, அ. ச. ஞானசம்பந்தம், கி. வா. ஜகந்நாதன், கி. சந்திரசேகரன், பரலி சு. நெல்லையப்பர், புதுவை கனகலிங்கம், வ. உ. சி. ஆறுமுகம், எம். எஸ். சுப்பிரமண்ய ஐயர், ஏ. ஜி. வெங்கடாச்சாரி, சாரங்கபாணி ஐயங்கார், திரிலோக சீதாராம், ஸ்ரீமதிகள் லீலாவதி ராமசுப்பிரமணியம், ஏ. ஆர். இந்திரா, பாரதியாரின் குமாரியான ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி ஆகியவர்கள் சொற்பொழிவு ஆற்றினார்கள்.

பிரசங்கமாரிகளுக்கு மத்தியில் ஸ்ரீமதி மீனலோசனி ராமசாமி, ஸ்ரீமதி இந்திரா பார்த்தசாரதி, ஸ்ரீ கங்காதரன் ஆகியவர்கள் பாரதியின் கீதங்களைப் பாடிச் சபையோரை மகிழ்வித்தார்கள்.

முதல் நாள் ஸ்ரீ மதுரை மணி ஐயர் அவர்களின் நட்சத்திரக் கச்சேரியும் குமாரி சாருபாலாவின் பரத நாட்டியமும் விழாவுக்குச் சிறப்பை அளித்தன. இரண்டாம் நாள் ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரியின் இன்னிசைக் கச்சேரியும், ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்களின் பாரதியார் பாடல் இசை நாடகமும் விழாவுக்குப் பெருமை கொடுத்தன.

இந்த ஆண்டு பாரதி விழாவை இவ்வளவு சிறப்பாக நடத்திக் கொடுத்த பெருமை ஸ்ரீ ட்ரோஜன் அண்ணாமலைச் செட்டியார், ஸ்ரீ ஆக்கூர் அனந்தாச்சாரியார், ஸ்ரீ ஸி. வி. ஆர்எம். அழகப்பச் செட்டியார் ஆகிய மூவருக்கும் உரியது.

பாரதி கண்காட்சியை அமைத்துக் கொடுத்த ஸ்ரீ ரா. அ. பத்மநாபனின் அரிய தொண்டைச் சிறப்பாகப் பாராட்ட வேண்டும்.

பாரதி விழாவுக்கென்று துரிதகாலத்தில் அரங்க மேடையும் மண்டபமும் பந்தலும் அமைத்துக் கொடுத்த ஹிந்தி பிரசார சபைத் தலைவர் ஸ்ரீ எஸ். சத்திய நாராயணாவுக்குப் பாரதி சங்கம் பெரிதும் கடமைப் பட்டுள்ளது.

---

1. பாரதியாரின் அமர ஜயந்தி விழாவில் கலந்து கொண்ட பிரமுகர்களில் சிலர். 2. பாரதி விழா காலையில் அன்னதான விழாவுடன் தொடங்கியது. 3. விழாத் தலைவர் ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன் பேசுகிறார். 4. அன்னதானத் திருப்பணியை ஸ்ரீ முருகதாஸரின் தலைமையில் சாதுஜன சமாஜத்தார் நடத்தி வைக்கிறார்கள். 5. நிதி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம். பாரதி கண்காட்சியைத் திறந்து வைத்துப் பார்வையிடுகிறார். 6. பாரதி விழாப் பந்தலில் கூடியிருந்த ரஸிகர் மகாசபையில் ஒரு சிறு பகுதி.




## 11. ஏமாற்றம்!

மந்திர மோதிரத்தைப் பெற்றுக் கொண்ட சங்கீத வித்வான் அடைந்த சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல. இனி இளவரசி பிரபாவை விடுதலை செய்து அழைத்துக் கொண்டு போகலாம் என்று மகிழ்ந்தார் சங்கீத வித்வான். ஆயினும் மந்திரவாதியின் எதிரிலேயே 'பிரபா, என்னுடன் வந்து விடு' என்று எப்படிக் கூப்பிடுவது? அவ்விதம் கூறுவது நாகரிகம் அல்ல அல்லவா?

எனவே மந்திரவாதியினிடம் "நான் போய் வருகிறேன்" என்று கடைசி முறையாகக் கூறி விட்டுப் புறப்பட்டார். அப்படிப் புறப்பட்டவர் அந்தக் காட்டிலேயே பகல் நேரத்தை யெல்லாம், 'பிரபா வருவாள்' 'பிரபா வருவாள்' என்று எதிர்பார்த்துக் காத்துக் கிடப்பதில் செலவழித்தார்; ஆனால் பிரபா வரவே இல்லை.

அன்றிரவுதான், இனி பிரபாவை எதிர்பார்ப்பதில் புண்ணிய மில்லை என்று தீர்மானித்து நகரை நோக்கிப் புறப்பட்டார்.

நாட்டிலிருந்து, பிரபாவின் இருப்பிடத்தைத் தேடிவர எழு நாட்களாயின. ஆனால் இப்பொழுதோ ஐந்து நாட்களிலேயே திரும்பிச் சென்று விட்டார் என்றால் சங்கீத வித்வான் எவ்வளவு வேகமாக நடந்திருக்க வேண்டும் என்று யாரும் சுலபமாக ஊகித்துக் கொள்ளலாம்.

இவ்வளவு துரிதமாக நடந்தது எதற்குத் தெரியுமா? தமது சிஷ்யன் நந்தகுமாரனைப் பிடித்து அவனிடம் மந்திர மோதிரத்தைக் கொடுத்துக் காட்டுக்கு அனுப்பி, இளவரசி பிரபாவை அழைத்து வர வேண்டும் என்ற ஒரே நோக்கந்தான். இந்த ஒரு நோக்கம் காரணமாகவே அவ்வளவு வேகமாக நடந்து வந்தார்.

ஆனால் நகரத்தை நெருங்க நெருங்க அவருக்கு மற்றோர் சந்தேகம் உள்ளுக்குள் ஏற்படலாயிற்று.

'அடாடா, நம்முடன் இன்னும் ஆறு பேர் அல்லவா வந்தார்கள். அவர்கள் திரும்பிய பிறகு, மந்திரவாதி கூறியபடி அன்று காலை கோட்டை வாசலில் நுழைந்த முதல் ஆசாமியைப் பிடித்துப் பட்டம் கட்டியிருந்தால் என்ன செய்வது?' என்ற எண்ணம் உதித்தது.

முதலில் சங்கீத வித்வானுக்குப் பிரபாவை மந்திரவாதியிடமிருந்து விடுவித்தால் போதும் என்றிருந்தது. பிறகு 'இவன் இளவரசி போல் காணப்படுகிறான். இவனை விடுதலை செய்தால் இவனுக்குப் பட்டம் சூட்டலாம் அல்லவா?' என்று நினைத்தார். இந்த இரண்டு எண்ணங்களும் மாறி மாறி அவர் உள்ளத்தில் தோன்றி அவரைக் குழப்பின.

ஆனால் நாட்டை யடைந்தவுடன் சங்கீத வித்வான் இன்னும் யாருக்கும் பட்டம் சூட்ட வில்லை என்பதை யறிந்தார். மந்திரவாதி சொன்ன அன்று காலை யாரோ இடைப் பையன் முதன் முதலில் கோட்டைக்குள் நுழைந்ததினால், அவனைக்

கோபப்பட்டுச் சிறைப்படுத்தி விட்டார்கள். அவ்வளவுதான்! இளவரசன் ஒருவனும் வரவில்லை என்பதை ஜனங்களிடம் விசாரித்துத் தெரிந்து கொண்டார்.

பின்னர் வித்வான் தமது சிஷ்யனைப் பற்றிப் புலன் விசாரித்தார். அவர் மனைவி "நீங்கள் போனதற்குப் பிறகு உங்கள் சிஷ்யன் இந்தப் பக்கம் எட்டிக்கூடப் பார்க்கவில்லை. நல்ல சிஷ்யன்! நல்ல குரு, போங்கள்!" என்ருள்.

சங்கீத வித்வான் அடுத்தாற் போல் இன்னொரு காரியம் செய்வது என்று தீர்மானித்தார்.

அதாவது, ராஜ குருவிடம் சென்று 'காட்டில் மந்திரவாதியின் வீட்டில் இருக்கும் பெண் ராஜகுடும்பத்தைச் சேர்ந்தவளாகத் தோன்றுகிருள். அவளை எப்படியாவது அழைத்து வந்து பட்டம் கூட்டி விடலாம். மந்திரவாதி ஏதாவது இடையூறு செய்வானே என்று பயப்படவேண்டியதில்லை. ஏனெனில் அவனுடைய மந்திர மோதிரம் இங்கே யிருக்கிறது. அவனுல் ஒன்றும் செய்ய முடியாது' என்று கூறிவிட வேண்டும் என்று தீர்மானித்தார். அப்படியே கூறவும் செய்தார்.

அதற்கு மறுநாளே, இளவரசியை அழைத்து வர இரண்டு குதிரை வீரர்கள் காட்டுக்கு அனுப்பப் பட்டனர்.

காட்டுக்குச் சென்ற வீரர்கள், மூன்ரும் நாளே போனபடியே திரும்பி வந்தனர்.

ஆம், இளவரசி பிரபாவை அவர்கள் அழைத்து வராததைக் கண்டு சங்கீத வித்வான் திடுக்கிட்டார்.

இப்பொழுது அவருக்குப் பிரபாவைப் பற்றிய கவலை இருக்கவில்லை; தேசத்தைப் பற்றிய கவலையும் இருக்கவில்லை. தன்னைப் பற்றிய கவலையே வந்து விட்டது. தனக்கு எத்தகைய தண்டனை ஏற்படப் போகிறதோ என்று பயந்தார்.

அந்தக் குதிரை வீரர்களைச் சேனபதி, "ஏன் அந்தப் பெண்ணை அழைத்து வரவில்லை?" என்று கேட்டார்.

"நீங்கள் கூறிய கட்டிடத்தில் பெண்ணும் இல்லை, கிழவனும் இல்லை! அவ்வீட்டில் யாருமே இல்லை" என்ருர்கள்.

"இந்தச் சங்கீத வித்வான் ஏதோ புளுகி யிருக்கிருன்! இவனைப் பிடித்துத் தள்ளுங்கள் சிறையில்" என்ருர் சேனபதி.

சங்கீத வித்வான் அந்த வார்த்தைகளைக் கேட்டாரோ இல்லையோ, மூர்ச்சை யுற்றுக் கீழே விழுந்தார்.

ஆனல் அந்த வீரர்கள், கால்பக்கம் ஒருவரும் தலைப் பக்கம் ஒருவராகப் பிடித்துச் சிறைக் கூடத்தில் கொண்டு போய்ப் போட்டனர் சங்கீத வித்வானை.

இப்படி மூர்ச்சையுற்ற நிலையில் அவர் எத்தனை நாழிகை இருந்தாரோ தெரியாது.

அவருக்குச் சுய பிரக்ஞை வந்தபோது, தமக்கு மிகவும் பழக்கமான குரலில் "ஐயா!" என்று யாரோ கூப்பிடுவது கேட்பது போலிருந்தது!

ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவையும் ஆயிற்று. இன்னும் கண்களை மூடிக் கொண்டிருப்பது நியாயமில்லை என்று கண்களைத் திறந்தார். என்ன ஆச்சரியம்! தன் மீது கவிழ்ந்து கொண்டிருப்பது நந்தகுமாரன் அல்லவா? "நந்தகுமாரா?" என்றார் சங்கீத வித்வான் கண்களை இன்னும் நன்றாக மலர்ந்து.

"ஆம், குருவே! நானேதான்!" என்றான் நந்தகுமாரன்.

அவருக்குண்டான சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல. எழுந்து உட்கார்ந்தார். அவனை அப்படியே அணைத்துக் கட்டிக் கொண்டார். உச்சி முகர்ந்தார்.

"நந்தகுமாரா, உனக்காக நான் எவ்வளவு முயற்சி எடுத்துக் கொண்டேன். எங்கேயெல்லாம் உன்னைத் தேடினேன். கடைசியில் உன்னைத் தேடிப் பயனில்லை என்று நிர்மானித்தபோது, நீ அகப்பட்டாய்!" என்று ஆரம்பித்து எல்லா விவரமும் கூறினார்.

மேலும் காட்டில் பிரபாவைத் தான் பார்த்ததாகவும், அவளை மந்திரவாதியினிடமிருந்து விடுவித்து அழைத்து வர தாம் எடுத்துக் கொண்ட முயற்சிகளைப் பற்றியும் கூறினார். கடைசியில் பிரபா தன்னுடன் வர மறுத்ததையும் கூறினார். "அதனால் என்ன, ஒன்றும் கெட்டுப்போய் விடவில்லை" என்று தேறுதல் கூறித் தான் மாய மோதிரத்தைக் கொண்டு வந்திருப்பதையும் காண்பித்தார். "இதை நீ இப்பொழுதே எடுத்துச் சென்று உன் காதலி பிரபாவை அழைத்து வா!" என்று பரபரப்புடன் கூறினார் சங்கீத வித்வான்.

"அது சரி, ஐயா! ஆனால் இந்த மோதிரத்தை என்ன மந்திரத்தைச் சொல்லிப் பயன் படுத்த வேண்டும் என்பதை அந்த மந்திரவாதியினிடம் கற்று வந்தீர்களா?" என்று கேட்டான் நந்தகுமாரன்.

"அடாடா! அதைக் கேட்க மறந்து போனேனே!" என்றார். (தொடரும்)

## கவுன்ஸிலரின் உலக யாத்திரை

சென்னை கார்ப்பரேஷன் கவுன்ஸிலரும் வர்த்தகப் பிரமுகருமான ஸ்ரீமான் வி. ஆர். ராமநாதய்யர் அவர்களும், ஸ்ரீமதி ராமநாதய்யர் அவர்களும் சமீபத்தில் இங்கிலாந்து, அமெரிக்கா, கிழக்கு ஆசிய நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு 12-9-53 அன்று திரும்பிய போது, சென்னை மீனம்பாக்கம் விமான கூடத்தில் ஏராளமான நண்பர்கள் அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றார்கள். ஸ்ரீமான் ராமநாதய்யர் அவர்கள் தமது சுற்றுப் பிரயாண அனுபவங்களைப் பற்றிக் கூறும்போது, அமெரிக்கர்கள் இந்தியாவுக்கு எல்லா வகையிலும் உதவ மிகவும் ஆர்வம் கொண்டிருப்பதாகவும், தொழில் முன்னேற்றம், பெரிய ஆறுகளின் அணைக்கட்டுத் திட்டங்கள் முதலிய துறைகளில் நாம் அடைந்துள்ள முன்னேற்றத்தைப் பற்றி அந்நாட்டவர்களுக்குக் கூறத் தமக்குச் சந்தர்ப்பங்கள் வாய்த்தன என்றும் கூறினார்.



ஸ்ரீமதி ராமநாதய்யர், பாரதப் பெண் குலத்தின் பெருமையைப் பற்றி டெலிவிஷனில் பேசினாராம்.

அமெரிக்காவில் யாத்ரீகர்களுக்கு வசதிகள் அளிக்கும் பல ஹோட்டல்கள் இருப்பதாகவும், அம்முறையில் நம் நாட்டிலும் ஹோட்டல்கள் ஏற்பட வேண்டும் என்றும் அப்படி ஏற்பட்டால் டாலர்கள் சம்பாதிக்க சௌகரியப்படும் என்றும் கூறினார்.

மேலும் பொதுவாக அமெரிக்கர்கள் நம் நாட்டினரைப்போல் எதற்கும் 'சர்க்கார் செய்யவேண்டும்; அரசாங்கம் செய்ய வேண்டும்' என்று எதிர்பார்க்காமல் சொந்த முயற்சிகளில் நம்பிக்கைக் கொண்டிருக்கிறார்கள் என்றும் கூறினார்.

இரண்டாவது மகா யுத்தத்தினால் ரொம்பவும் பீடிக்கப்பட்ட, ஜப்பான், இப்பொழுது பழைய நிலையை அடைந்து விட்டதென்றும், ஜப்பானிய மக்களைப் போன்ற மிகவும் சுறுசுறுப்பான மக்களை உலகில் வேறு எங்கும் காண முடியாது என்றும் தெரிவித்தார்.

பல உண்மைகளை அறிந்துத் திரும்பியுள்ள ஸ்ரீ ராமநாதய்யர் தமது தொழில் துறையிலும் அவற்றைக் கையாண்டு பொதுநலச் சேவை புரிவார் என்று எதிர்பார்க்கிறோம்.

P. 5406

# அன்றாடம் 2 நிமிஷங்கள் செல வழித்தால் போதும் . . . . நீங்கள் பூரண எழிலுடன் திகழலாம்



பிரதி இரவிலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமை உங்கள் சருமத்தில் தடவி நன்கு தேயுங்கள்—ஒரே ஒரு நிமிஷம் தான் ஆகும். அதிலுள்ள எண்ணெய்கள் சருமத்தில் ஊடுருவிச்சென்று, மயிர்க்கால்களில் படிந்திருக்கும் சிறு சிறு தூசியையும் அழுக்கையும் வெளியேற்றி விடுகிறது. சருமத்தை மெதுவாகத் துடைத்து, அது எவ்வளவு பரிசுத்தமாக விளங்குகிறதென்பதைப் பாருங்கள்.

இவ்வற்புத க்ரீமை இன்னும் கொஞ்சம் எடுத்து முகத்திலும் கழுத்திலும் பூசிக்கொள்ளுங்கள். இரவு முழுவதும் அது அப்படியே இருக்கட்டும். காலையில் எழுந்தவுடன் உங்கள் மேனி மிக துல்லியமாயும் பூரண பொலிவுடனும் விளங்குவதைக் கண்டு அதிசயிப்பீர்கள்.



பிரதிதினம் காலையிலும் ஒரு நிமிஷம் உங்கள் முகத்தில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மெதுவாகத் தடவுங்கள். அது பூரணமாக மறைந்துவிடும். சருமம் பட்டுப்போன்று மழமழப்பாகவும் அற்புதச் சோபையுடனும் விளங்கும்.

கண்ணுக்குப் புலப்படாத வகையில் முகத்தில் மறைந்துள்ள இந்த பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் திரைப்படலம் பகல் முழுவதிலும் உங்கள் எழிலைப் பாதுகாக்கும். உங்கள் மிருதுவான சருமத்திற்கு இந்த பாதுகாப்பு அவசியம்—முக்கியமாக வரட்சைக் காற்றிலும் சூரிய கிரணங்களின் வெப்பத்தாலும் சருமம் துவண்டு போகாமல் காப்பாற்றி வர அத்யாவசியம்.

உங்கள் சருமத்திற்கு இவ்விரட்டைப் பராமரிப்பு ஒவ்வொரு நாளும தேவை. பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையும் அன்றாடம் தவறாமல் உபயோகித்து உங்கள் அழகிற்கு அழகு ஊட்டுங்கள்!






உலகில் எங்குமே பெண்மணிகள் தங்கள் எழிலை புதுமை குன்றாமல் பாதுகாக்க பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையுமே உபயோகிக்கின்றனர். அவர்கள் இயற்கை அழகின் இரகசியம் அதுதான்.

முக ஸிங்காரிப்புக்குமுந்தான், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவிக்கொண்டால் அதன் மேல் பௌடர் பூசுவது மிக எளிது—அழகாயுமிருக்கும், ஞாபகமிருக்கட்டும்.

## பாண்ட்ஸ்

# படங்களில் ஒரு ரத்தினப் படம் - "ரத்தின தீபம்"

"மனிதன் எதனால் உயர்கிறான்?" என்ற தலைப்பின் கீழ்ச் சில காலத்துக்கு முன்பு "கல்கி"யில் வெளியாகியிருந்த தலையங்கம் நேயர்களில் சிலருக்கு நினைவு இருக்கலாம். அவ்விதம் மனிதனை உயர்த்தக்கூடிய பண்புகளை அடிப்படைக் கருத்துக்களாக வைத்துப் பேசும் படங்களை எடுக்க வேண்டுமென்ற யோசனை அக் கட்டுரையில் வெளியாகியிருந்தது. மனிதனை உயர்த்தக்கூடிய பண்புகளில் மிக மேன்மையானது அன்பு; மிகச் சக்தி வாய்ந்ததும் அன்புதான். அன்பின் மூலமாக ஒருவனுடைய ஒழுக்கம் உயர்கிறது; ஒழுக்கத்தின் மூலமாக மனிதனே உயர்கிறான்.—இதை மெய்ப்பித்துக் காட்டும் அற்புதமான கதை "ரத்தின தீபம்" என்னும் பேசும் படமாக வெளியாகியிருக்கிறது. வங்காளத்தில் மிகப் பிரசித்திபெற்ற இலட்சிய டைரக்டரான ஸ்ரீ தேவகிபோஸ் எடுத்த படம். இப்போது நல்ல முறையில் தமிழாக்கப்பட்டுத் தமிழ் நாட்டில் பல இடங்களில் திரையிடப் பட்டிருக்கிறது.



சின்ன ராணி

ரத்தின தீபக் கதையைக் கேளுங்கள்: கோபால் பட்டாச்சாரி என்னும் வாலிபன் இல்லற வாழ்க்கையில் பெரும் ஏமாற்றமடைகிறான். அதனால் மனம் வெறுத்த அவன் தான் பார்த்து வந்த உதவி ஸ்டேஷன் மாஸ்டர் வேலையைத் துறக்கிறான். அன்றைய தினம் ரயிலிலிருந்து இறக்கப்பட்ட ஒரு பிரேதத்தைக் கூர்ந்து பரிசோதிக்கிறான்.

இறந்து போனவன் ஒரு ஜமீன்தார். பதினைந்து வருஷங்களாக வீட்டை விட்டு விலகிச் சன்னியாசிகளோடு சன்னியாசியாக வாழ்ந்தவன். இப்பொழுது வீடு திரும்புவதற்காக வருகிறான் என்பதை அவன் எழுதி வைத்திருந்த வாழ்க்கைக் குறிப்புகளிலிருந்து கோபால் பட்டாச்சாரி தெரிந்து கொள்கிறான். அவன் மனத்தில் ஒரு விசித்திர எண்ணம் உதயமாகிச் செயல்படுகிறது. கோபால் பட்டாச்சாரி ஜமீன்தாராக மாறுகிறான்.

பதினைந்து வருஷங்களுக்குப் பிறகு திரும்பி வந்த தன் மகனைப் பார்த்துக் கண் பார்வை இழந்த அவன் தாயார் பெரிய ராணி அளவிலா மகிழ்ச்சி கொள்கிறாள். கணவன் இறந்து விட்டான் என்று எண்ணி விதவைக் கோலம் பூண்டிருந்த சின்ன ராணி மீண்டும் பட்டு ஆடைகள் அணிந்து கொள்கிறாள்; பூச்சூட்டிக் கொள்கிறாள்; நெற்றிக்குப் பொட்டு இட்டுக் கொள்கிறாள்; அளவு கடந்த ஆனந்தத்தில் மூழ்கித் திளைக்கிறாள்.

கணவன் என்று கருதிக் காதலாகிக் கசிந்துருகி நிற்கும் அந்தக் கற்புக்கரசியை ஏமாற்றக் கோபாலுக்கு மனம் வரவில்லை. மூன்று மாதங்களுக்கு மனைவியைத் தீண்டுவதில்லை என்று விரதம் கொண்டிருப்பதாகச் சொல்லி விடுகிறான்.

இந்த மூன்று மாதங்களும் கணவனின் விரதத்துக்குப் பங்கம் ஏற்படாதபடி தன் உணர்ச்சிகளை எல்லாம் அடக்கிக் கொண்டு நரக வேதனைப்பட்டு வருகிறாள் சின்ன ராணி.

பதினாறு வருஷங்களுக்குப் பிறகு திரும்பி வந்த இளம் ஜமீன்தாரிடம் பொக்கிஷத்தின் சாவி ஒப்படைக்கப் படுகிறது. கல்கத்தாவிலிருந்து புதிய மோட்டார் வண்டி வருகிறது. கத்தைகத்தையாகப் பணநோட்டுகளை எடுத்துக் கைப் பெட்டியில் வைத்துக் கொண்டு போலி ஜமீன்தார் காரில் ஏறிக் கனவேகமாகக் கம்பி நீட்டப் பார்க்கிறான்.

ஆனால் அவனை மகன் என்றும் பதி என்றும் கருதிய இரு உத்தமிகளின் அன்பு குறுக்கிட்டுத் தடை செய்கிறது. பணத்தைத் திரும்பவும் இரும்புப் பெட்டியில் வைத்து விடுகிறான். மூன்று மாத விரதம் முடிகிறது. கோபால் மறுபடியும் போக முயற்சிக்கிறான். சின்ன ராணி 'ரத்தின தீப' ஆரத்தி எடுத்து



பத்திரிகைக்காரர்களுக்கென்று பிரத்யேகமாகத் திரையிடப்பட்ட காட்சிக்கு மேயர் செங்கல்வராயன் தலைமை வகித்தார். கையில் கடிதத்தை வைத்துக் கொண்டு பேசுபவர்தான் டைரக்டர் ஸ்ரீ தேவகி போஸ்.

அவனைப் போகாமல் தடுத்து நிறுத்துகிறான். சின்ன ராணியின் அன்பால், உயர்ந்த பண்பால், புனிதத் தன்மையால் கோபால் மனம் மாறுகிறது. அவன் மனிதனாகிறான். தான் யார் என்பதை விளக்கி ஒரு கடிதம் எழுதி அவன் கையில் கொடுக்கிறான்.



போலி ஜமீன்தார்

உண்மையைத் தெரிந்ததும் சின்ன ராணி அதிர்ச்சியால் மரண மடைகிறாள். அந்தக் கற்புக்கரசியின் அஸ்தியைத் தொடக்கூடக் கோபாலின் மனம் கூசுகிறது. காலம் எல்லாம் போற்றி வந்த அவள் சீலத்தைக் கறைப் படுத்த விரும்பாமல் பக்தி சிரத்தையுடன் அந்த அஸ்திக்குத் தலை வணங்கினான்.

அன்பிலும் ஒழுக்கத்திலும் உயர்ந்த இந்தப் புனித வாழ்க்கைச் சித்திரத்தைக் காவியமும், கலை நயமும் பிணைந்து பரிமளிக்கும் "ரத்ன தீப" மாக, அணையாத சுடர் விளக்காகத் தயாரித்திருக்கிறார் ஸ்ரீ தேவகி போஸ். படத்தின் ஒவ்வொரு பகுதியிலும் பாரத நாட்டின் பண்பை எடுத்துக்காட்ட அரும்பாடு பட்டிருக்கிறார்.

கதாபாத்திரங்களை நம்முடன் உணர்ச்சியோடு பேச வைத்திருக்கிறார். கதாபாத்திரங்களின் உள்ளத்தின் ஆழத்தில் புதைந்து கிடக்கும் எண்ணங்களை எல்லாம் அற்புதமான உத்திகளைக் கையாண்டு, தம்முடைய சக்தி வாய்ந்த டைரக்ஷன் மூலம் மிக உயர்வாக எடுத்துக் காட்டி யிருக்கிறார்.

சின்னராணியாக நடிக்கும் அனுபா குப்தாவின் அபாரமான நடிப்புத் திறமையை ஸ்ரீ தேவகிபோஸ் நன்றாக வெளிப்படுத்தி யிருக்கிறார். கோபாலின் கடிதத்தைப் படிக்கும் போது, அவள் தன்னுடைய கணவன் இல்லை என்பதை அவள் உணரும்போது கதாநாயகி வாய் திறந்து பேசவில்லை. ஆனால் அவளுடைய துடிக்கும் உதடுகள், விழிக்கும் கண்கள் எல்லாம் பேசுகின்றன. அவள் கையில் பிடித்திருக்கும் கடிதம் கண்ணீருடன் பேசுகிறது. அப்பொழுது அடிக்கும் பேய்க் காற்று, பெய்யும் மழை, 'பளிர்' என்று மின்னும் மின்னல், ஆடும் விளக்கு இவைகள் மூலமாக டைரக்டர் கதாநாயகியின் உள்ளக் குமுறலை எடுத்துக்காட்டுகிறார்.

இன்னும் அவருடைய டைரக்ஷன் திறமையால் அரண்மனை மண்டபங்கள், அதிலிருக்கும் பெரிய தூண்கள் அவள் சோகக் கதையைச் சொல்லுகின்றன. இளைய ஜமீன்தார் புவனின் எரியும் புகைப் படம், அடுக்கடுக்காக ஏற்றி வைத்த ரத்ன தீபம் எல்லாம் அவளைப் பார்த்துப் புலம்புகின்றன. கடைசியில் சின்ன ராணியின் எரியும் சிதை; அதில் சுடர் விட்டு மின்னும் தீயின் செந் நாக்குகள் எல்லாம் அவளுடைய கற்பின் புனிதத் தன்மையை எடுத்துச் சொல்லுகின்றன. சிதையில் இருக்கும் மலர்கள் அவள் ஒழுக்கத்தின் உயர்வை உலகுக்கு எடுத்துக் கூறுகின்றன.

ஒரு தடவை பார்த்தவர்கள் மனத்தில் அழியாமல் நின்று ஒளிரக் கூடிய "ரத்தின தீபம்" மிக உயர்தரமான படம்.

இவ்வளவு உயர்வாக எடுக்கப்பட்டிருக்கும் இந்தப் படத்தை இந்திய சர்க்கார் வெளி நாடுகளில் காண்பிப்பதற்குத் தேர்ந்தெடுத்திருக்கிறார்களாம். உண்மையிலே இந்தியப் பட உலகுக்கும், இந்தியப் பெண் குலத்துக்கும் பெருமையை அளிக்கும் படம்; பாரதத்தின் மகோன்னதமான பண்பாட்டையும், கலாசாரத்தையும், புனிதத் தன்மையையும் உயர்த்தக்கூடிய படம் என்பதில் ஐயமில்லை.

---



நம் பாரத நாட்டின் தலைநகரான டில்லி ராஜ் கட்டத்தில் இருக்கும் உலகமெல்லாம் போற்றி வணங்கும் உத்தமன் காந்தி மகானின் சமாதி முன்னிலையில் ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் தாம் இயற்றிய காந்தி மகான் கதையைப் பல டில்லித் தமிழன்பர்களின் முன்னிலையில் பாட்டாகவும் வசனமாகவும் காலட்சேபமாகச் செய்து மகிழும் புனிதப் பேற்றை அடைந்தார்.

# அமிதமாக புகை குடிப்போர்களே

# நில்லுங்கள்

புகை பிடிப்பதால் ஏற்படும் துர்நாற்றம், பற்களில் ஏற்படும் விஷம் பற்களில் அடையும் புகைக் கறை.

இவைகளை பினகா பற்பசையை தினம் இரு முறை உபயோகித்து விரட்டுங்கள்.

சாஸ்திரிய முறையில் தயாரித்த பினகா பல்பசை பலதரப்பட்ட வைத்திய சோதனைகள் மூலம் புகை குடிப்பதில் ஏற்படும் வாய்நாற்றம், பல்விஷம் பற்களில் ஏற்படும் புகைக் கறை இவைகளை நீக்குவதில் மேன்மையானது என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது. நேர்த்தியான வாசனை பொருந்திய பினகா பல்பசையை உபயோகியுங்கள்.

## பினகா (ரோஸ்)

சக்தி வாய்ந்த "ஸல்போரிஸினோலியட்" என்னும் பொருள் கொண்டது.

## பினகா க்ரீன்

இயற்கையின் ஆச்சரிய துர்க்கந்த நாசினியான சுத்தி செய்த க்ளோரோபில்லும் கொண்டது.




ரேடியோ ஸிலோனில் ப்ரதி திங்கட் கிழமை மாலை 8 மணிக்கு பினகா ஹிட் பரேட்டையும் பிரதி ஞாயிறு மாலை 8 மணிக்கு பினகா கீதமாலையையும் கேளுங்கள்.



"ஸிபா" வின் விசேஷ குணம் பொருந்திய ஒரு பற்பசை.

CBK 12083 TAMIL

# நல்ல குழந்தை!




"அலமாரியில் மேல் தட்டில் பித்தளை டப்பியில் முறுக்கு வைத்திருக்கிறேன். தினம் ஆபீசிலிருந்து வந்ததும் இரண்டு முறுக்கு எடுத்துக் கொள்ளுங்கள். பிறகு டப்பியை ஜாக்கிரதையாக மூடி வையுங்கள்!"

"உம், சரி."

"பனியன்கள் எல்லாவற்றையும் வெளியே எடுத்துப் போட்டு வீணாக்கி விடாதீர்கள். நாலு பனியன்களை எடுத்து டிரஸ் பீரோவில் நடுத்தட்டில் வைத்திருக்கிறேன்."

"உம், சரி."

"தலையணை உறைகள் எல்லாவற்றையும் வெளியில் எடுத்து வீணாக்கி விடாதீர்கள்."

"உம், சரி."

"காலையில் எழுந்ததும் படுக்கையை நினைவாகச் சுருட்டி வைத்து விட்டுப் பல் தேய்க்கப் போங்கள்."

"உம், சரி."

"விடியற்காலை பால்காரன் வந்து கூப்பிட்டால் தூங்கி வழிந்து சாமியாடாமல், நினைவாக எழுந்து பாலை வாங்கி ஜாக்கிரதையாக மூடி வையுங்கள். பாலைக் காய்ச்சும் போது பக்கத்திலேயே இருங்கள். என்னத்தையாவது கதை, கட்டுரை என்று மனசில் நினைத்துக் கொண்டு கற்பனையில் மிதக்க ஆரம்பித்து விடாதீர்கள். உங்களுக்குத்தான் காப்பி தயார் செய்யத் தெரியுமே! அதை மட்டும் வீட்டிலேயே சாப்பிட்டு விடுங்கள். என்ன, நான் சொல்வது விளங்குகிறதா?"

"உம், சரி."

"நான் ஊருக்குப் போன பிறகு உங்கள் இஷ்டம் போல் இரவில் நேரங் கழித்து வீட்டுக்கு வராதீர்கள்!"

"உம், சரி."

"என்ன இது! எதைச் சொன்னாலும் 'சரி,' 'சரி' என்று தலையை ஆட்டுகிறீர்கள்!"

"என்ன இந்திரா, இப்படிச் சொல்லுகிறாய்? நீ இதுவரையில் எனக்குப் போட்டுக் கொண்டு வந்த உத்தரவுகளை என்னால் மறுத்துப் பேச முடியுமா? எல்லாவற்றையும் ஆமோதிக்க வேண்டியதுதானே?"

"இந்தக் குறும்புப் பேச்சுத்தானே வேண்டாம் என்கிறேன்? உங்கள் நன்மைக்குத்தானே நான் சொல்லுகிறேன்?"

"நான் மறுத்துப் பேசவில்லையே, இந்திரா? சரியென்று தானே சொன்னேன்?"

"இப்பொழுது எல்லாம் உங்களுக்குக் கேலியாகத்தான் இருக்கும். நான் ஊருக்குப் போய்விட்டால் அப்பொழுது தெரியும். நான் ஒருத்தி மட்டும் இங்கே இல்லாவிட்டால் வீடு வீடாக இருக்காது."

"அதெல்லாம் இல்லை. நீ வருவதற்கு முன்னால் நான் ஆபீசுக்குப் போகவில்லையா? என்னுடைய துணிமணிகளை ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ளவில்லையா? நீ வந்துதான் என்னைச் சீர்திருத்தினாயா?"

"ஆகா, நான் வருவதற்கு முன் நீங்கள் உங்கள் துணிமணிகளை ஜாக்கிரதையாகத்தான் வைத்துக் கொண்டிருந்தீர்கள்! சமயத்துக்குக் கிடைக்காது. அவ்வளவுதான். கல்யாணமாகி நான் இங்கு வந்ததும் உங்க



னிடம் பேசவே ரொம்ப வெட்கப்பட்டேன். ஆனால் இரண்டொரு நாட்களுக்குள் அந்த வெட்கம் பறந்தோடி விட்டது. கைக் கடிகாரத்தைக் கையில் கட்டிக் கொண்டே அதை விழுந்து விழுந்து வீடு முழுவதும் தேடுவீர்கள். சீசன் டிக்கட்டைப் பையில் வைத்துக் கொண்டு ஸ்டேஷனுக்குப் போய், அதைத் தேடிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பி வருவீர்கள். அம்மம்மா! உங்களுடைய திருவிளையாடல்கள் ஒன்றா, இரண்டா? இதையெல்லாம் பார்த்து என்னால் தாங்க முடியவில்லை. ஆகவே, உங்களோடு வெட்கத்தை விட்டுப் பழக ஆரம்பித்தேன். குழந்தைமாதிரி உங்களைக் கவனித்துக் கொள்ள ஆரம்பித்தேன். சினேகிதர்களோடு பேசிக்கொண்டே யிருந்து விட்டு எத்தனை தடவை ஆபீசுக்குப் போக நாழிகையாகி விட்டது என்று தவித்திருக்கிறீர்கள்! அந்த மாதிரிப் பேச்சில் ஈடுபட்டு விட்டால், உங்களுக்கு இந்த உலகத்து நினைவே இருக்காது. அப்பொழுது உங்களுக்கு மணி ஆகிவிட்டது என்பதை நாசுக்காகச் சொல்லிப் புரிய வைப்பதற்குள் எனக்குப் போதும் போதும் என்று ஆகிவிடும்....!"

"சரி, சரி. போதும் பிரசங்கம். நான் இப்பொழுதே உன் பிரசங்கத்துக்கு வந்தனோபசாரம் கூறி விடுகிறேனே!"

இது எனக்கும் என் சகதர்மிணி ஸ்ரீமதி இந்திராவுக்கும் இடையே நிகழ்ந்த சம்பாஷணை. இது நடந்து ஒருமாதம் ஆகி விட்டது. அவள் பிரசவத்துக்காகத் தன் பிறந்தகம் போய் விட்டாள்.

ஊருக்குப் புறப்படுவதற்கு ஒரு மாசத்துக்கு முன்னாலிருந்தே இந்திரா எனக்கு ஓயாமல் என்னென்னவோ சொல்லிக் கொண்டேயிருந்தாள். ஒரு நாட்டு நிர்வாகப் பொறுப்பு முழுவதையும் அப்படியே என்னிடம் ஒப்பு விப்பதுபோல் அவள் மிகுந்த கவலையோடு காணப்பட்டாள்.

அவள் மிகவும் அக்கறையோடு ஊருக்குப் போன பிறகு நடந்து கொள்ள வேண்டிய விதத்தைப் பற்றியும் இன்னும் என்னென்னவோ வீட்டு விவகாரங்களைப் பற்றியும் மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டிருந்தபோது எனக்கு எரிச்சலா யிருந்தது.

"இந்திரா, என்னை என்ன சின்னக் குழந்தையென்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா? நான் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ளுகிறேன். நீ ஒன்றுக்கும் கவலைப் படாதே. நீ நிம்மதியாக ஊருக்குப் போ!" என்று அவளிடம் எரிந்து விழுந்தேன்.

"ஆமாம். நீங்கள் சின்னக் குழந்தை அல்ல. பெரிய குழந்தை யென்று வைத்துக் கொள்ளுங்களேன்! இப்பொழுது கோபம் தான் வரும். நான் ஊருக்குப் போன அப்புறம் தான் தெரியும்!" என்றாள் இந்திரா.

எனக்குப் படுகோபம் வந்து விட்டது. குத்திக் காண்பித்தால் கோபம் வராதா?

"இந்திரா, வாயை மூடு. நீதான் இந்தக் குடும்பத்தைத் தாங்குகிறாயோ? கோபுரத்தைப் பொம்மை தாங்குகிறது போலத்தான் நீ இல்லாவிட்டால் ஒன்றும் நடக்காது என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். இனிமேல் எனக்குப் புத்தி சொல்லிச் சீர்திருத்தம் செய்யும் வழக்கத்தை விட்டு விடு!" என்று நாடக மேடைப் பாணியில் கம்பீரமான குரலில் ஒரு போடு போட்டேன்.

இந்திரா பயந்துதான் போய் விட்டாள். அன்று முழுவதும் அதற்குமேல் அந்தப் பேச்சு கிளம்பவில்லை.

ஆனால் மறுநாளே ஆரம்பமாகி விட்டது.

"வெற்றிலைக்காரன் வெற்றிலைக் கட்டை ஜன்னல் வழியாகப் போட்டு விடுவான். அதை நினைவாகப் பார்த்து எடுத்து வையுங்கள். வெற்றிலை இன்னொரு நாளைக்குக் காணும் என்று தோன்றினால் அவனை நிர்த்தாட்சண்யமாக வேண்டாம் என்று சொல்லி அனுப்பிவிடுங்கள். 'வேணுமானால் போட்டு விட்டுப் போ' என்று அசடு மாதிரி மேலும் மேலும் வாங்கிக் கொண்டிருக்காதீர்கள். ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள்! என்ன, தெரிந்ததா?" என்றாள் இந்திரா.

"உம், சரி" என்றேன் நான். வேறு என்னத்தை அவளுக்குப் பதில் சொல்லுவது?

அந்த ஒருநாளைக்குத் தான் என் கோபம் கொஞ்சம் பயன் பட்டது. மீண்டும் இந்திரா எனக்கு உத்தரவுக்கு மேல் உத்தரவாகப் போட ஆரம்பித்து விட்டாள்.

நானும் பல தடவை சீறி விழுந்தேன் அவளிடம். போனமாதம் அவள் தம்பி முத்துக் கிருஷ்ணன் ஹைதராபாத்திலிருந்து ஒரு மாதம் லீவில் இங்கு வந்திருந்தான். அவனுடன் இந்திராவை ஒரு நல்ல நாளில் பிறந்தகத்துக்கு அனுப்பி வைக்கும்படி என் மாமனார் எழுதி யிருந்தார்.

அந்த நல்லநாளும் வந்தது. அன்று ஆபீஸுக்கு லீவு எழுதிப் போட்டு விட்டு இந்திரா ஊருக்குப் போவதற்கு வேண்டிய சாமான்களை யெல்லாம் மிகவும் அக்கறை யாகத் தயார் செய்யலானேன்.

என் மைத்துனன் முத்துக்கிருஷ்ணன் வந்த ஒரு வாரத்துக்குள் எனக்கும் இந்திராவுக்கும் நடந்த வாதப் பிரதி வாதங்களையும் மேற்படி வாதப் பிரதிவாதங்களுக்கு இடையே நான் எடுத்த விசுவ ரூபங்களையும் கவனித்துக் கொண்டுதான் இருந்தான். ஆனால் என்னிடம் அது சம்பந்தமாக ஒன்றும் பேசவில்லை. இப்பொழுது அவனும் இந்திராவும் உள்ளே ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பேச்சுக்கிடையில் என் பெயரும் அடிபடவே கொஞ்சம் கவனிக்கலானேன்.

"அக்கா, அத்திம்பேருக்கு என்ன, எடுத்த தற்கெல்லாம் இப்படிக் கோபம் வருகிறது? நீ என்ன சொன்னாலும் எரிந்து விழுகிறாரே! நீ ஊருக்குப் போகப் போகிறாய் என்று கூட அவருக்கு மனம் இளகவில்லையே!" என்றான் முத்துக்கிருஷ்ணன்.

இதற்கு இந்திரா என்ன பதில் சொல்லப் போகிறாள் என்று அறிந்து கொள்ளுவதில் என் மனம் ரொம்பவும் ஆவல் கொண்டது.

"இல்லை, முத்துக்கிருஷ்ணா! அவர் எப்பொழுதும் இப்படித்தான். எடுத்ததற் கெல்லாம் முன்கோபம் வந்து விடும். கோபம் தணிந்த பிறகு நான் என்னத்தைச் சொன்னாலும் கேட்பார். நான் ஊருக்குப் போகிற வரையில் என்னிடம் கடு கடு, சிடு சிடு வென்று இருப்பார். ஆனால் நான் ஊருக்குப் போய் விட்டேனானால் அவரால் அந்தப் பிரிவைத் தாங்க முடியாது. அவர் ஒரு குழந்தைமாதிரி, தெரியுமோ! அவருக்குத் தனக்காக ஒன்றுமே தெரியாது!"

வேறு சமயத்தில் இந்த மாதிரி சொல்லக் கேட்டிருந்தால் நான் புளகாங்கிதமடைந்து, சினிமாவில் வரும் கதாநாயகன் மாதிரி அவளை அப்படியே தூக்கிக்கொண்டு ஹால் முழுதும் சுற்றி வந்திருப்பேன். ஆனால் நான் அப்பொழுது இந்திராவைப் பாராட்டத் தயாரா யில்லை. எனக்கு அவளிடம் கோபம்தான் வந்தது. எனக்கு ஒன்றுமே தெரியாதாமே! ஆனால் என் மைத்துனன் முத்துக் கிருஷ்ண னுக்கு எதிரில் போய் என்கோபத்தை அவளிடம் காட்டி நாகரிகக் குறைவாக நடந்து கொள்ள விரும்பவில்லை. மேலும் பேச்சு அவர்களுக்குள் நடந்திருக்கிறது.

மாலையில் ஒரு டாக்ஸி கொண்டு வந்து சாமான்களை யெல்லாம் ஏற்றி, முத்துக் கிருஷ்ணனையும் இந்திராவையும் ஏற்றிக் கொண்டு சென்ட்ரல் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டேன். நீலகிரி எக்ஸ்பிரஸில் மூன்றாவது வகுப்பில் சௌகரியமாக இடம் பிடித்து அவர்கள் இருவரையும் அமரச் செய்தேன்.

வண்டி புறப்படும் நேரம் வந்தது. முதல் மணி அடித்தது.

"ஜாக்கிரதையாக வீட்டைப் பார்த்துக் கொள்ளுங்கள். ஹோட்டல் சாப்பாடு உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. ஒரு மாசத்துக் கெல்லாம் பெரிய லீவு ஒன்று எடுத்துக் கொண்டு அங்கே வந்து விடுங்கள். அப்பா உங்களைப் பார்க்க வேண்டும் என்று ரொம்ப ஆசைப்படுகிறார். வெளியே போகும் போது கதவைப் பூட்டிக் கொண்டு போங்கள், என்ன?" என்றாள் இந்திரா.

"உம், சரி!" என்றேன் நான். வேறு என்னத்தைச் சொல்வது?

"என்னிடம் உங்களுக்குக் கோபமா? நீங்கள் மறந்து விடப் போகிறீர்களே என்று அடிக்கடி நான் சொல்லிக் கொண்டே விருப்பேன் என்னத்தையாவது. கோபித்துக் கொள்ளாதீர்கள். கடிதாசு எழுதுங்கள். என்ன?" என்றாள் இந்திரா.

"உம், சரி" என்றேன் நான்.

இதற்குள் கார்டு பச்சை விளக்கைக் காண் பித்தார். இரண்டாவது மணியும் அடித்தது.

நான் வண்டியை விட்டு இறங்கி இந்திரா வின் முகத்தைப் பார்த்தேன். அவள் முகம் என்ன அப்படிச் சிவந்திருந்தது! கண்கள் ஒரேயடியாகக் கலங்கி யிருந்தன.

"இந்திரா. இப்பொழுது உன் உடம்பு இருக்கும் நிலையில் நீ கண் கலங்கக் கூடாது. நீ நிம்மதியாகப் போய்வா! நான் அவசியம்

லீவு எடுத்துக் கொண்டு வருகிறேன்!" என்றேன். இதற்குள் வண்டி கூவென்று ஊதி விட்டு நகர ஆரம்பித்தது.

"உடம்பைப் பார்த்துக் கொள்ளுங்கள். கடிதாசு எழுதுங்கள். வீட்டை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள்! ராத்திரி சீக்கிரம் வந்துவிடுங்கள்!" என்றாள் இந்திரா.

நான் வண்டியோடு போய்க் கொண்டே, "உம், சரி" என்றேன். பிறகு வண்டி போகிற வரையில் பிளாட்பாரத்திலேயே நின்று பார்த்துக் கொண்டிருந்தேன்.

வீட்டுக்கு வந்து வாசற் கதவைத் திறந்து விளக்கின் ஸ்விட்சைப் போட்டுச் சற்று நேரம் என் அறையில் அமர்ந்து படித்துக் கொண்டிருந்தேன். என் மனம் இந்திராவின் நினைவிலேயே சுழன்று கொண்டிருந்தது.

இன்றுடன் இரண்டு மாசமாகி விட்டது, இந்திரா ஊருக்குப் போய். அவள் ஊருக்குப் போய் இருபது நாட்களுக்கெல்லாம் அவளுக்குப் பிரசவமாகி விட்டது. ஆண் குழந்தை. நான் பதினைந்து நாள் லீவு எடுத்துக் கொண்டு ஊருக்குப் போனேன். குழந்தையையும் இந்திராவையும் பார்த்தேன். ஆனால் அந்த அபார சம்சார சாகரத்தில் அவளோடு உல்லாசமாகப் பேசிப் பொழுது போக்க வசதி கிடையாது. என் மைத்துனிமார்கள் கிரிஜா, பிரேமா இருவரும் குறும்புக்காரப் பெண்கள். பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு எதிரில் சாதாரணமாக எதைப் பேசினாலும் கேலி செய்ய ஆரம்பித்து விடுவார்கள்.

அன்று இந்திராவோடு பேசிக் கொண்டிருந்துவிட்டு வெளியே புறப்பட்டேன்.

"அத்திம் பேருக்கு அக்காளிடம் ஒரே பயம். அக்காள் சொன்ன சொல்லுக்கு மறு சொல் பேச மாட்டார். எல்லாவற்றுக்கும் 'உம், சரி!' என்று தலையை யாட்டி விடுவார்!" என்று பிரேமா என்னைப்பற்றி வெளுத்துக் கட்டிக் கொண்டிருந்தாள்.

அவள் சொன்னது சரிதான். இந்திராவிடம் பேசுவதற்குக் கிடைத்த சிறு அவகாசத்திலும் அவள் வழக்கம் போல் எனக்கு அறபோதனை செய்யத் தவறவில்லை.

"வீட்டை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். எங்கே போனாலும் கதவை நினைவாகப் பூட்டிக் கொண்டு போங்கள். இராத்திரி சீக்கிரம் வீட்டுக்குத் திரும்பி விடுங்கள். வீட்டை வேலைக்காரி பெருக்குகிற போது கவனித்துக் கொள்ளுங்கள்......"

நான் இதற்கெல்லாம் என்ன பதில் சொல்லுவது? என் வீட்டிலே இப்படியெல்லாம் அவள் பேசியிருந்தால் நிச்சயம் அவளுடன் ஒரு சண்டை பிடித்திருப்பேன். மாமனார் வீட்டில் இருந்து கொண்டு ரஸக் குறைவாக நடந்து கொள்ளலாமா?

குழந்தைக்கு நாலுமாதம் நிறைந்து விட்டது. இந்திராவிடமிருந்து எனக்குக் கடிதம் வந்தது, அடுத்த வாரம் தன் தாயாருடன் புறப்பட்டு வருவதாக.

இந்திராவும் அவள் தாயாரும் வந்தார்கள். களையிழந்து கிடந்த என் இல்லம் என் பிள்ளையின் வரவால் புத்தொளி பெற்றது.

வீட்டுக்கு வந்த சற்று நேரத்துக்கெல்லாம் இந்திரா, "குழந்தைக்குப் பசும் பால் வேண்டுமே! பால்காரனிடம் சொல்லியிருக்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"அடாடா! சொல்லவில்லையே! நேரம் ஆகி விட்டதே! இனிமேல் பாலுக்கு என்ன செய்வது?" என்று தவித்தேன்.

"காலையில் பால்காரன் வந்தானா, இல்லையோ? அவனிடம் இரண்டு ஆழாக்குப் பால் அதிகப்படியாக இன்று சாயங்காலத்திலிருந்தே வேண்டும் என்று சொல்லி விட்டீர்களோ?" என்று அடுத்த வெடி குண்டை இந்திரா என்மீது வீசினாள்.

நான் தலையைச் சொறிந்தேன்.

"சொன்னால் என் மேல் கோபம் உங்களுக்குப் பிரமாதமாக வந்து விடும். மூன்று நாள் உங்களுக்குக் கடிதம் எழுதினேன். நேரில் சொல்லும்போது 'உம், சரி!' என்று தலையை ஆட்டுவீர்களே, அதே மாதிரி என் கடிதத்துக்கும் 'ஆகா, அப்படியே' என்று நாலு தடவை எழுதினீர்கள். ஏதாவது சொன்னால், 'நீதான் இந்தக் குடும்பத்தை நடத்துகிறாயோ? கோபுரத்தைப் பொம்மை தாங்குவதாக எண்ணமோ? எனக்கு ஒன்றும் தெரியாது என்று நினைத்துப் பேசுகிறாயே!' என்று விசுவரூபம் எடுத்துக் கர்ஜிப்பீர்கள்..!"

"இந்திரா, வந்ததும் வராததுமாக என்னுடன் சண்டைக்கு வந்து விட்டாயே! நான் குழந்தை தான். ஒப்புக் கொள்கிறேன். இப்பொழுது பசும் பாலுக்கு எங்கே போவது?" என்று கேட்டேன் நான்.

இந்திரா, வெற்றிப் புன்னகை முகத்தில் மலர, "அப்படி வாருங்கள் வழிக்கு! நான் பசும் பாலுக்குப் பக்கத்து வீட்டில் சொல்லி ஏற்பாடு செய்து விட்டேன். பால்காரனுக்கும் சாயந்திரத்திலிருந்து அதிகப்படியாகப் பால் வேண்டும் என்று அவர்கள் வீட்டுப் பையனிடமே சொல்லி யனுப்பி விட்டேன். உங்கள் சமாசாரம் தெரிந்துதான் நான் ஊரிலிருந்து வந்ததும் வராததுமாக இதையெல்லாம் ஏற்பாடு பண்ணினேன். கோபித்துக் கொள்ளாதீர்கள். நீங்கள் கொஞ்சம் குழந்தைக்கு விளையாட்டுக் காட்டிக் கொண்டு இங்கேயே இருங்கள். அம்மா ஸ்நானம் செய்யப் போயிருக்கிறாள். நானும் போய் ஸ்நானம் செய்து விட்டு இதோ வந்து விடுகிறேன்!" என்று சொல்லி விட்டு எழுந்தாள். உடனே குழந்தை பாலசந்திரன் தன் பொக்கை வாயைத் திறந்து தன் அம்மாளுக்கு அநுசரணையாக, எல்லாம் தெரிந்தவன் மாதிரி சிரித்தான். இனிமேல் எனக்குக் கோபம் எப்படி வரும்?

# தீப அலங்காரம்

புராதனக் காலத்திலும்
இப்பொழுதும்



புராணக் கதைகளில் அற்புதமாகக் கூறப்படும் நாகப் பாம்பை முக்கிய அம்சமாகக் கொண்டு இந்தியச் சிற்பியால் உருவாக்கப்பட்ட இந்த விளக்கானது அழகும், புராண வரலாறும் பொருந்தி இருக்கிறது. கிருஷ்ண பிரான் சிறுவனாக இருந்த பொழுது அவரைக் கொல்லு வதற்காக ஓர் விஷ மரம் நடப்பட்டது. கிருஷ்ணன் அந்த மரத்தின் கீழுள்ள படுத்து உறங்கிய பொழுது அம்மரம் அவருடைய முகத்தில் விஷத்தை கக்கியது. அப்பொழுது அருகில் வசித்து கொண்டிருந்த ஓர் நாகப்பாம்பு இச்சதியை அறிந்து, தன்னுடைய படத்தை விரித்துக் கொண்டு மரத்திலிருந்து விழுந்த விஷம் சிறுவனின்மேல் படாமல் பாதுகாத்தது. இந்த விளக்கில், நாகப்பாம்பால் கன்று விரிக்கப் பட்ட படமானது, அழகாக அமைக்கப்பட்ட இந்த தீபங்களின் சுடரை பிரதிபலிக்க உதவுகிறது.

*இந்தியாவின் புராதன தீபாலங்கார ஜோதிகளைத் அனுசரித்த, பிலிப்ஸ் கம்பெனியார் தீவிரமான ஆராய்ச்சியின் பலனாக தற்காலத்திற்கு வேண்டிய எல்லா வெளிச்ச சாதனங்களை தயாரிப்பதில் முயற்சி அடைகிறார்கள்*




**பிலிப்ஸ்—வெளிச்ச சாதனங்களை தயாரிக்கும் முதன்மையான ஸ்தாபனம்**

PL 75 (A)




## 15. ஆசை தவழும் விழிகள்

சிரிப்பதா? படம் சிரிப்பதா? அதுவும் மனைவியின் படம் தம்மைப் பார்த்துச் சிரிப்பதா? மாதவப் பிரஸாத் மிரண்டு மறுபடியும் படத்தைப் பார்த்தார். எல்லாம் வீண் பிரமை என்று தம் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொள்ள முயன்றார். விலைக்குத்த விட்டு விட்டது போல் நின்றுவிட்ட அவருடைய சிந்தனை கடந்தகால சம்பவங்களை நினைத்துப் பார்க்கத் தொடங்கியது; மனைவியையும் மனைவிக்குத் தாம் அந்தக் காலத்தில் அளித்த வாக்குறுதியையும் சுற்றி வளைய வர ஆரம்பித்து விட்டது.

அவருடைய கண்கள் அவரையும் அறியாமல் அடிக்கடி அந்தப் படத்தைப் பார்க்கலாயின. அந்தப் படம் அங்கே மாட்டப்பட்டிருந்தது. அவருக்குத் தம்முடைய சிந்தனைக்கும் யோசனைக்கும் இடையூறாக இருப்பதாகத் தோன்றியது. கல்யாணத்தைப் பற்றி யோசித்துக் கொண்டு அந்தப் படத்தையும் பார்க்கும் பொழுது அவரை வெட்கம் பிடுங்கித் தின்றது. அவமானம் தலை குனியச் செய்தது. வேதனை கொந்த புண்ணில் கோலிடுவது போல் உள்ளத்தை வாட்டி வருத்தியது.

எனவே, 'அந்தப் படத்தை வெளியே உள்ள பெரிய ஹாலில் வைத்து விட்டால் என்ன தவறு?' என்று எண்ணமிட்டார். நேர்த்தியும் அழகும் நிறைந்த இவ்வளவு பெரிய படம் அங்கே யிருந்தால் தான் எடுப்பாக நன்றாயிருக்கும்!' என்று அவருடைய ஆசை மனம் அவருக்கு ஒத்துப் பாடியது. தாம் சுயேச்சையாகச் சிந்தனை செய்ய, தம் சுயநலத்தை நிறைவேற்றிக் கொள்ள அதுதானே சரியான வழி?

மாதவப் பிரஸாத் படத்தை ஹாலில் மாட்டுவது பற்றி வேலைக்காரி லக்ஷ்மியிடம் ஆலோசனை கேட்டார். அவர் சொல்வதற்கெல்லாம், 'ஆமாம்' போட்டு அவரைத் திருப்திப் படுத்துவது தானே அவளுடைய வேலை? அதுதானே அவளுக்கு நலன் பயக்கக் கூடியது? அப்படி யிருக்கும் பொழுது அவளுக்கு என்ன ஆட்சேபணை இருக்க முடியும்?

இந்த உலகத்தின் காரியங்களை என்னவென்று சொல்வது? உயிருடன் இருந்த காலத்தில் அந்த அறையில் தன் குழந்தைகளுடன் யிருந்த சீரும் சிறப்புமாகச் செல்வாக்குடன் ஆனந்த வாழ்க்கை வாழ்ந்து மாதவப் பிரஸாதின் மனைவியாக மனையாட்சி நடத்தியவள் அவள். மரித்தபின் அவளுடைய மூன்று அடிப் படத்துக்குக் கூட அந்த அறையில் இடம் இல்லையென்றால், அப்பப்பா! சிந்திக்கக் கூட அல்லவா இந்தப் பாழும் மனம் மறுக்கிறது!

கல்யாணம் என்னும் சொல்லுக்கு உள்ள சக்தியே அலாதி. கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் இருதயத்தில் இடம் பெற்று விட்டால் கிழவர்களும் அல்லவா குமரர்களாக ஆகிவிடுகிறார்கள்! கிழவர்களின் கதியே இப்படியென்றால் மாதவப் பிரஸாதைப் பற்றிக் கேட்கவா வேண்டும்? அவர்தான் கிழவர் அல்லவே! நான்கு குழந்தைகளுக்குத் தகப்பனாராகிவிட்ட பொழுதிலும், அவருக்கு வயது ஒன்றும் அவ்வளவு அதிகமாகிவிடவில்லை அல்லவா? அவர் தம்மை இருபது—இருபத்தைந்து வயதே ஆன கட்டிளங் காளையாகக் கருதலானார்.

அவருடைய உடையில் ஒரு புதுமை உண்டாயிற்று. அலுங்காத துல்யமாக வெளுத்து வந்த ஆடைகளை அணியலானார். சற்றுக் கசங்கினாலும் அவர் அந்த ஆடையைக் களைந்து புத்தாடை உடுத்திக்கொள்ளத் தலைப்பட்டார். குழந்தைப் பருவத்திலேயே அவருக்குக் குதிரை சவாரி என்றால் கொள்ளை ஆசை. ஆனால் சில வருஷங்களாக அதை விட்டு அவர் வண்டியில்தான் பிரயாணம் செய்து வந்தார். அதற்கு வயதும் ஒரு காரணமாயிருக்கலாம். பால்ய காலத்து நினைவு எழவே, அவருக்கு 'என்ன வண்டி சவாரி வேண்டிக் கிடக்கிறது?' என்ற எண்ணம் எழுந்தது. வண்டியைக் கண்டாலே அவருக்கு வெறுப்புத் தட்டியது. பழையபடியே குதிரை சவாரி செய்ய வேண்டும் என்ற ஆசை அவரை அடிக்கடி உந்தித் தள்ளத் தொடங்கியது.

"எசமான்! குதிரை தயாரா யிருக்கிறது!" என்று அவரிடம் வந்து சொன்னான் குதிரைக் காசாரி.

"சரி!" என்று சொல்லி விட்டு மாதவப் பிரஸாத் கீழே இறங்கி வந்து குதிரையை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார்.

குதிரை கன கம்பீரமாக நிமிர்ந்த கழுத்துடன் நின்று கொண்டிருந்தது. எஜமானரைக் கண்டதும் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளும் தோரணையில் அது ஒரு முறை பலமாகக் கனைத்தது.

"குதிரை கொஞ்சம் கனத்து விட்டது போலிருக்கிறதே!" என்று கேட்டார் மாதவப் பிரஸாத்.

"எசமான், இதற்கு ஏதாவது வேலை கொடுத்தால் தானே? சிற்சில சமயம் குழந்தைகள் உட்காருகின்றன. நான் சில சமயம் தண்ணீர் காட்டக் கொண்டு போகிறேன். இல்லாவிட்டால் மணலில் புரளவிடக் கொண்டு போகிறேன். குதிரை கட்டியே இருந்தால் இப்படித்தான் போய் விடும்!" என்றான் காசாரி.



"உண்மைதான். இதைத் தினம் நான் கைந்து மைல் ஓட்டிச் செல்லத்தான் வேண்டும். இன்று முதல் இதன் மேல் ஏறி நானே கொஞ்ச தூரம் உலாவப் போய் வருகிறேன்."

இதைச் சொல்லி முடிப்பதற்குள்ளாகவே, மாதவப்பிரஸாத் சேணத்தின் மிதியடி மீது காலை வைத்துக் குதிரை மீது ஜம்மென்று ஏறி உட்கார்ந்து விட்டார்.

அதுவோ நல்ல உயர்ந்த ஜாதிக் குதிரை. மாதவப்பிரஸாத் ஏறி உட்கார்ந்ததும் பெருமிதத்துடன் கனவாகவமாகக் கழுத்தைச் சாய்த்துக் கொண்டு, ஷோக்காக நடை போட்டுக் கொண்டு ஓடத் தொடங்கியது.

"எஜமான்! வெகு நாட்களுக்குப் பிறகு வெளியே வந்திருக்கிறது, குதிரை! கொஞ்சம் ஜாக்கிரதையாகப் போங்கள். ரொம்ப தூரம் போக வேண்டாம்!" என்று எச்சரிக்கை செய்தான் குதிரைக் காசாரி.

"எல்லாம் எனக்குத் தெரியும்!" என்று வெகு அலட்சியமாகப் பதில் சொல்லி விட்டு மாதவப் பிரஸாத் முன்னேறினார்.

இளமையில் மாதவப்பிரஸாத் எத்தனையோ குதிரைகளைத் தம் இஷ்டப்படி ஆட்டி அடக்கி யிருக்கிறார். எந்தக் குதிரையும் அவர் கட்டுக்கு அடங்காமற் போனதில்லை; சொன்னது கேட்காமல் இருந்ததில்லை. அன்று குதிரையின்மீது ஏறி உட்கார்ந்ததும் அவருக்குப் பழையபடி அதே உற்சாகம் தலைக்கேறி விட்டது. அவருக்குக் காசாரியின் ஆலோசனையோ எச்சரிக்கையோ அநாவசியமானது என்றே பட்டது. அவர் குதிரையின் குணத்தை நன்கு அறிந்திருந்தார். நல்ல ஜாதிக் குதிரைகளைப் பற்றி அவருக்கு நன்றாகத் தெரியும். குறைந்த பக்ஷம் குதிரைக் காசாரியைக் காட்டிலும், அவருக்குக் குதிரைகளைப் பற்றிய அறிவும் அநுபவமும் அதிகம் என்பதை யாருமே ஆட்சேபிக்க முடியாது.

ராமலாவின் வீட்டு வழியாகப் போன மாதவப் பிரஸாதுக்குச் சட்டென்று மனத்தில் ஒரு யோசனை தோன்றிற்று. 'இன்று என்னை எதிர் பார்க்க வேண்டாம் என்று ராமலாவிடம் சொல்லி விட்டுப் போனால் என்ன?' என்ற எண்ணந்தான் அது. அந்த எண்ணம் எழுந்த அடுத்த கணமே அவர் குதிரையை ராமலாவின் வீட்டுப் பக்கம் திருப்பினார். மாதவப் பிரசாதினிடம் இருந்த ஆள்-தேள்களுக்கு ஒரு குறை வில்லை. யாராவது ஒருவனைக் கூப்பிட்டு அவர் இந்த வேலையை ஒப்படைத்திருக்கலாம். ஆனால் ஆளை அனுப்பாமல் அவரே போக ஆசைப் பட்டதற்குக் காரணம் என்னவோ? அது அவருக்குத்தான் தெரியும்.

ராமலாவின் வீட்டுக்கு எதிரே வந்ததும் அவர் ஆவல் தவழும் கண்களுடன் வீட்டு ஜன்னலைப் பார்த்தார். குதிரையின் குளம்புச் சப்தத்தைக் கேட்ட மனோரமா ஆவலுடன் ஜன்னல் வழியே வெளியே எட்டிப் பார்த்தாள். குதிரை மீது உட்கார்ந்திருந்த மாதவப் பிரஸாதுக்குத் தமது ஜன்மமே ஸாபல்ய மடைந்து விட்டதாகத் தோன்றியது. அவர் எண்ணித் துணிந்த கருமம் வெற்றி பெற்றது. இருதயத்திலே விழுந்த நம்பிக்கை வித்து முளைவிட்டுக் கிளைவிட்டு, மொக்கு மலராகிக் காயாகிப் பழுத்தே விட்டது போன்ற பெருமிதம் உண்டாயிற்று. உள்ளத்திலே ஊற்றெடுத்த உவகை முகத்திலே பொங்கி வழிந்தது.

மாதவப் பிரஸாத் சட்டென்று நிமிர்ந்து விறைப்பாக உட்கார்ந்தார். நடுத்தர வயதைத் தாண்டிக் கொண்டிருக்கும் மாதவப் பிரஸாதினிடம் கட்டிளங் காளைகளுக் குரிய செயல்களைக் கண்ட மனோரமாவுக்குச் சிரிப்பு வந்தது. அவள் அதை வெகு பாடு பட்டு அடக்கிக் கொள்ள முயன்றாள். ஆயினும் அந்தச் சிரிப்பு உதடுகளில் இலேசாகக் கோடிட்டுப் பளிச்சிட்ட பின்தான் மறைந்தது. அவள் உடனே தன் தலையை உள்ளுக்குள் இழுத்துக் கொண்டாள். மனோரமாவின் இந்தச் சேஷ்டைகள் மாதவப் பிரசாதின் கண்களில் படாமல் இல்லை.

இந்த மந்தகாசம் இயல்பானதா? அவரிடம் தன் மதிப்பையும் மரியாதையையும் தெரிவித்துக் கொள்வதா? அல்லது அவருக்கு அன்பழைப்பு அனுப்புவதா?

மனோரமா வாய் திறந்து ஒன்றும் சொல்லாத வரையில் மாதவப் பிரஸாத் என்ன வேண்டுமானாலும் எண்ணிக் கொள்ளலாம்; கற்பனை செய்து கொள்ளலாம் அல்லவா?

மாதவப் பிரஸாத் குதிரையின் மீது உட்கார்ந்த வண்ணமே ராமலாவுக்குக் குரல் கொடுத்தார்.

மனோரமா மறுபடியும் ஜன்னல் வழியாகத் தன் தலையை வெகு லாகவமாக நீட்டி, "அவர் வீட்டில் இல்லையே!" என்றாள்.

இத்தனை சுருக்கமான பதில் மாதவப் பிரஸாதுக்குத் திருப்தி அளிக்க வில்லை. ஆசையை அதிகமாகக் கிளறித்தான் விட்டது. எனவே, "அவர் எப்பொழுது திரும்புவார்?" என்று மறுபடியும் கேட்டார்.

"தெரியாது!" என்ற பதில் இன்னும் சுருக்கமாக மனோரமா விடமிருந்து வந்தது.

மாதவப் பிரஸாத் பேச்சை வளர்த்த விரும்பினார். ஆனால் மனோரமாவோ ரத்தினச் சுருக்கமாகப் பதில் சொல்லிக் கொண்டிருந்தாள். அந்தப் பதில்கள் கூட அவருக்கு இனிமையாகத் தான் இருந்தன. அதோடு அவளுடைய அழகிய உருவத்தைப் பார்த்துக் கொண்டிருக்கக் கூடிய பொன்னான சந்தர்ப்பம் வேறு அல்லவா கிட்டிக் கொண்டிருந்தது! அம்மாதிரி அரிய சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் இருக்க வேண்டி, அவர் பேச்சை வளர்த்த விரும்பியதில் என்ன வியப்பு?

"மன்னி இருக்கிறாளா?" என்று அவர் மனோரமாவைக் கேட்டார்.

குதிரையின் மேல் உட்கார்ந்த வண்ணமே இந்தக் கேள்விகளை ஏன் கேட்க வேண்டும்? கொஞ்சம் இறங்கி வந்து கேட்டால் என்ன கௌரவக் குறைச்சலாம்? இறங்கி உள்ளே வந்தால் தானாக எல்லா விஷயமும் தெரிகிறது! எப்பொழுதும் வீட்டுக்குள் வருகிறவர் இன்று மட்டும் வராமல் இப்படி வெளியி லிருந்தே பேசுவானேன்? இவருக்குக் குதிரை சவாரி செய்யத் தெரியும் என்பதை எல்லோருக்கும் காட்டிக் கொள்ளவா?

இம்மாதிரி எத்தனையோ கேள்விகள் மனோரமாவின் இருதயத்தில் இடம் பெற்றன. இருந்தாலும் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல் இருந்து விட முடியுமா? ஏதாவது பதில் சொல்லித் தானே ஆகவேண்டும்? எனவே, அவள், "அம்மா உள்ளே கைக்காரியமாக இருக்கிறாள். கூப்பிடட்டுமா?" என்று கேட்டாள்.

தாயாரைக் கூப்பிட்டு விட்டால், தான் பதில் சொல்லும் தொல்லையிலிருந்து தப்பலாம் என்பது மனோரமாவின் அந்தரங்க அபிப்பிராயம்.

"வேண்டாம், வேண்டாம்! கூப்பிட வேண்டாம். நானே கூட வீட்டுக்குள் வருவேன். ஆனால் குதிரையின் மேல் இருக்கிறேன். அதனால் தான் வரவில்லை" என்றார் மாதவப் பிரஸாத்.

அப்பப்பா! எத்தனை எள்ளி நகையாடக் கூடிய வார்த்தைகள்! குதிரையின் மேல் சவாரி செய்கிறவன் இறங்கி வீட்டுக்கே வருவதில்லை என்பது போல் அல்லவா பேசுகிறார்! மனோரமாவுக்கு அவரைப் பரிகசித்து மட்டம் தட்டினால் என்ன என்று தோன்றிற்று. இருந்தாலும் அவள் பெண் அல்லவா? அவள் அப்படி எண்ணினாலும் பெண்களுக்கு இயல்பான நாணம் அவளை அப்படிச் செய்ய விடவில்லை.

குதிரையினால் நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருக்க முடியவில்லை. அவளுடைய பேச்சில் அதற்கு ஏதாவது சுவாரஸ்யம் தட்டினால்தானே? அது அங்கிருந்து புறப்பட அலைபாய்ந்த வண்ணம் நின்று கொண்டிருந்தது. ஆனால் மாதவப் பிரஸாதுக்கோ குதிரை அப்படியே அசையாமல் நின்று கொண்டிருக்க வேண்டும், தாம் மனோரமாவைப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று தோன்றிற்று. ஆனால் குதிரை நின்றால் தானே? அது குளம்பைத் தட்டிக் கொண்டு முன்னேறுவதிலேயே குறியாயிருந்தது. மனோரமாவும் உள்ளே போகத் துடியாய்த் துடித்துக் கொண்டு நின்றாள். குதிரை மாதவப் பிரஸாதின் ஆசைக்கு அதிகமாக மதிப்புக் கொடுக்காமல் பத்தடி முன்னேறி விட்டது.

அப்படி முன்னேறிக் குதிரை கொஞ்ச தூரம் சென்ற பின்தான், தாம் வந்த விஷயத்தைச் சொல்ல வில்லையே என்ற நினைவு மாதவப் பிரஸாதுக்கு வந்தது. தாம் வராவிட்டால், தமக்காக ராமலால் காத்





அம்மா :— ஏண்டா, பெரியவர்கள் பேசும் போது குறுக்கே பேசக் கூடாது என்று உனக்கு எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன்? அவர்கள் பேசி முடிகிற வரையில் காத்துக் கொண்டிருந்து......

பிள்ளை :—...அவர்கள்தான் பேசி முடிக்கிறதே இல்லையே, அம்மா!

இருக்க வேண்டாம் என்ற விஷயத்தைச் சொல்ல அல்லவா அவர் அவ்வளவு தூரம் வந்திருந்தார்! முன்னேறுவதில் குறியாயிருந்த குதிரையை, தாம் சொல்ல வந்த விஷயம் நினைவு வந்ததும் மாதவப் பிரஸாத் மறுபடியும் திருப்பினார். மனோரமா ஜன்னலருகில் தான் நின்று கொண்டிருந்தாள். அவளுக்கு அந்தக் குதிரையை மிகவும் பிடித்திருந்தது. முக்கியமாக, குதிரையின் கம்பீரத் தோற்றமும், அதன் சாய்ந்த கழுத்தும் அவள் மனத்தை மிகவும் கவர்ந்திருந்தன. குதிரை கண் மறைந்ததும் உள்ளே போகலாம் என்று எண்ணி நின்று கொண்டிருந்தவள், மாதவப் பிரஸாத் மறுபடியும் திரும்பி வருவதைப் பார்த்தாள். அதற்காகச் சிறிது நேரம் நின்றாள். குதிரையின் மீது உட்கார்ந்திருந்த மாதவப் பிரஸாத் தம்மைத்தான் மனோரமா கண் கொட்டாமல் பார்க்கிறாள் என்று எண்ணினார்.

குதிரை சவாரி செய்வது என்பது சாதாரண விஷயம் அல்ல. குதிரை சவாரி மனிதனை மகோன்மத்தனாக, மண்டைக் கர்வம் பிடித்தவனாக ஆக்கி விடக் கூடியது. குதிரை சவாரி செய்பவனுக்குக் குதிரை ஏறியதும் ஏற்படும் கர்வம் இருக்கிறதே, அப்பப்பா! அதைச் சொல்லி முடியாது. அதனால் தான் இன்றும் ஜனங்கள், தான் தோன்றித்தனமாக நடந்து கொள்பவனைப் பார்த்து, "என்ன அப்பா குதிரை ஏறுகிறாய்?" என்று கேட்கிறார்களோ என்று கூட எண்ணத் தோன்றுகிறது. பரீட்சையில் எல்லோருக்கும் முதல்வனாகத் தேறிய மாணவன் கூடக் குதிரை ஏறுபவனைப் போல் கர்வம் கொள்ள மாட்டான் என்று சொன்னால் அது மிகையாகாது. அதோடு ஒரு வயது வந்த வாலிபப் பெண் - அதிலும் அழகே உருவான பெண் தன்னைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நிற்கிறாள் என்பது தெரிந்து விட்டால் குதிரை சவாரி செய்பவனுக்கு ஏற்படும் கர்வத்தைச் சொல்லி முடியாது. அவன் தன்னைத் தானே நெப்போலியன் என்று எண்ணிக் கொண்டு விடுகிறான்.

குதிரைக்கு முன்னேறிய பின், பின் திரும்புவது என்பது சிறிதும் பிடிக்கவில்லை. எனவே, அது தன் கோபத்தையும் வேகத்தையும் வெகு ஆத்திரத்துடன் வெளியாக்கியது. தன் இரு முன்னங் கால்களையும் ஒரேயடியாக உயரத் தூக்கி உரக்கக் கனைத்தது. அம்மாதிரிக் குதிரையை அடக்குவதில் உள்ள ஆனந்தம் மாபெரும் சாம்ராஜ்யத்தை ஜயித்து வெற்றி வாகை சூடிக் கொள்வதைக் காட்டிலும் எவ்விதத்திலும் இம்மி அளவு கூடக் குறைந்ததில்லை. மாதவப் பிரஸாத் குதிரையைச் சமாளித்து ஜன்னலருகில் கொண்டு வந்து நிறுத்தினார். முரண்டு செய்யும் அந்தப் போக்கிரிக் குதிரையை ஆவலுடன் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தாள் மனோரமா.

"இன்று ஒருவேளை நான் வராவிட்டால் என்னை எதிர்பார்க்க வேண்டாம் என்று அண்ணாவிடம் சொல்லுங்கள்!" என்றார் மாதவப் பிரஸாத்.

"சரி!" என்று சுருக்கமாகப் பதில் அளித்தாள் மனோரமா பழையபடியே.

"முடிந்தால் வருகிறேன்!"

அதற்கும் 'சரி!' என்ற பதிலையே சொல்லி விட்டு மௌனமானாள் மனோரமா. அவள் மௌனம் சாதித்தாளே யொழிய அவளுடைய மனம் மௌனம் சாதிக்கவில்லை. 'ராமலாலுக்கு மாதவப் பிரஸாதினிடம் அப்படி என்ன முக்கியமான தலை போகிற காரியம், மாதவப்பிரஸாதை எதிர் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதற்கு? மாதவப்பிரஸாதுக்குத் தான் அப்படி என்ன முடை, தாம் வரவில்லை என்று சொல்லிப் போவதற்கு? கடைசியில் 'முடிந்தால் வருகிறேன்' என்று சொல்கிறாரே, அப்படி வருவதாயிருந்தால் இவ்வளவு தூரம் நேரத்தை வீணாக்கிக் கொண்டு அநாவசியமாக இப்பொழுது இதைச் சொல்லிப் போக வருவானேன்?' என்றெல்லாம் யோசிக்கத் தொடங்கி விட்டாள் மனோரமா. இப்படித் தன்னைத்தானே கேள்விகள் கேட்டுக் கொண்ட மனோரமா ஒருமுறை மாதவப் பிரஸாதின் முகத்தைப் பார்த்தாள். அப்பொழுது தான் அவளுக்கு விஷயம் விளங்கியது.

மாதவப் பிரஸாத் பேசிய அவ்வளவு பேச்சுக்கும் அர்த்தம் இல்லை, அவருடைய இருதயத்தின் ஆழத்திலே எழும் உணர்ச்சிக்குத்தான் ஒரு அர்த்தம் இருக்கிறது என்பதை உணர்ந்தாள் மனோரமா. 'அந்த அர்த்தத்தைப் பிறருக்குப் புரியும்படியாக வெளி

யிட அவருடைய கண்கள் முயற்சிக்கின்றன. அம்முயற்சியில் ஒரு வித வெற்றியையும் காண்கின்றன!' என்பதையும் அவள் கண்டு கொண்டாள். மாதவப் பிரஸாதின் விழிகள் கொட்டிய பாவத்தை உணர்ந்த மனோரமா மிகவும் மனம் வெதும்பினாள். அவளுடைய உள்ளத்திலே ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. 'இவரும் ஒரு ஆண் பிள்ளைமாதிரி! பெண்பித்துப் பிடித்து இப்படிச் சுற்றுகிறாரே!' என்று குமுறினாள். ஆனால் அவள் ஒரு விஷயத்தை ஆத்திரத்தில் அடியோடு மறந்து விட்டாள். அவள் மட்டும் தினமும் காலையிலும் மாலையிலும் சுதாகரிடமிருந்து கடிதம் வராதா என்று சாதகப் பட்சிபோலத் தபால்காரனை எதிர்பார்த்துக் கொண்டிருப்பானேன்? கடிதம் வராமல் போய் ஏமாந்து நம்பிக்கை இழந்த பின் தபால்காரனைச் சினந்து கொள்வானேன்? ஆத்திரம் குமுறும் அவளுடைய உள்ளத்துக்கு இதையெல்லாம் பற்றிச் சிந்திக்க நேரம் இருந்தால் மாதவப்பிரஸாதைப்பற்றி இப்படியெல்லாம் எண்ணமிடத் தோன்றுமா?

உள்ளக் குமுறலுடன் உணர்விழந்து நின்ற மனோரமா திடுரென்று திலைக்குத்த விட்டு நின்றாள். காரணம், குதிரைக்குக் கோபம் வந்து விட்டது தான். அதற்குத் தன்னை மாதவப்பிரஸாத் அப்படியும் இப்படியும் திருப்பி அலைக்கழித்தது பிடிக்கவில்லை. மனோரமாவிடம் விஷயத்தைக் கூறிவிட்டு மாதவப்பிரஸாத் அதை மறுபடியும் திருப்பினார். மனோரமாவின் முகத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கவேண்டும் என்ற ஆசையில் அவர் அவள் மீது வைத்த கண்களை வாங்கவே இல்லை. அதனால் அலட்சியமாகவே குதிரையைத் திருப்பினார். லகானைச் சொடுக்கியதும் குதிரை சட்டென்று தன் முன்னங் கால்களைத் தூக்கிக் கொண்டு மறுபடியும் நின்று விட்டது. அலட்சியமாயிருந்த மாதவப்பிரஸாத் துணுக்குற்றார். லகான் கை நழுவி விட்டது. அடுத்த கணம் அவர் 'தடால்' என்று உருட்டி அடித்துக் கொண்டு கீழே விழுந்து விட்டார்.

அதைக்கண்ட மனோரமா நடுநடுங்கி விட்டாள். தெரிந்த மனிதர் குதிரையிலிருந்து கீழே விழுவது. அதை ஒரு பெண் பேசாமல் பார்த்துக் கொண்டிருப்பது என்றால் எங்கே யாவது நடக்குமா? அவளுடைய மென்மையே உருவான நெஞ்சம் பட படத்தது.

அடுத்த கணமே அவள் அவருடைய ஒத்தாசைக்காக ஓடினாள். எத்தனைதான் ஒருவனை மனம் வெறுத்தாலும் அவன் கஷ்டத்தில் சிக்குண்டு விட்டால் அவனைக் காப்பாற்ற ஓடுவதுதானே மனிதனின் இயல்பு? பணத்தின் இயல்புங்கூட. அப்படியிருக்கும் பொழுது மலித உள்ளம் படைத்த மனோரமா ஓடியதில் என்ன வியப்பு? வாசற்படியண்டை வந்ததும் அவள் தன் தாயாருக்கும் குரல் கொடுத்து உதவிக்குக் கூப்பிட்டாள்.

"அம்மா! வாசலுக்கு ஓடி வா! மாதவப் பிரஸாத் விழுந்து விட்டார்!" என்று நெஞ்சம் பட பட படக்கக் கத்தியே விட்டாள்.

சுபத்திரா ஓட்டமும் நடையுமாக வாசலுக்கு வந்தாள். மனோரமா தெருவில் நின்று கொண்டிருந்தாள். மாதவப் பிரஸாத் தரையில் விழுந்து கிடந்தார். அவர் பிரக்ஞை தவறிக் கிடப்பதையும், அவர் தலையிலிருந்து ரத்தம் பீறிட்டுக் கொண்டு வருவதையும் கண்ணுற்ற சுபத்திரா நெஞ்சம் பதறினாள். அடுத்த விநாடியே சுய நினைவு பெற்றுத் தன் புடவை தலைப்பினால் ரத்தத்தைத் துடைத்து மாதவப் பிரஸாதை மூர்ச்சை தெளிவிக்கும் முயற்சியில் ஈடுபட்டாள்.

அதற்குள்ளாக அக்கம் பக்கத்திலுள்ள பத்துப் பதினைந்து பேர்கள் கூடி விட்டனர். சுபத்திரா ஓடிப் போய் நீர் கொண்டு வந்து காயத்தைக் கழுவினாள். மூர்ச்சை தெளிவிப்பதற்காக முகத்தில் நான்கைந்து கை நீரை அடித்தாள். சிறிது நேரத்துக் கெல்லாம் மாதவப் பிரஸாதுக்குச் சுய நினைவு வந்தது. தம்மைச் சுற்றிப் பத்துப் பேர் நிற்பதையும், குதிரை ஒரு புறம் நிற்பதையும் கண்ட அவருக்குத் தாம் குதிரையிலிருந்து கீழே விழுந்து விட்டோம் என்பது விளங்கியது.

"நான் விழுந்து விட்டேன்!"-ஆதரவற்ற குழந்தையைப் போல் வெகு சரளமாகச் சுபத்திராவிடம் தாம் விழுந்து விட்ட விஷயத்தைச் சொன்னார் மாதவப்பிரஸாத்.

"குதிரை சவாரி என்றாலே இப்படித்தான். அவர் கூட எத்தனையோ தடவை இப்படி விழுந்திருக்கிறார்!" என்று மாதவப்பிரஸாதுக்கு ஆறுதல் அளிக்கும் நோக்கத்துடன் பதில் கூறினாள் சுபத்திரா.

"அதிகக் காயம்பட வில்லை. நான் வீட்டுக்குப் போகிறேன்!" என்றார் மாதவப் பிரஸாத், பலபேர் அறியத் தாம் தைரியசாலி என்பதைக் காட்டிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில்.

"நன்றாயிருக்கிறது! வீட்டுக்குப் போவதா? நம் வீட்டுக்கு வந்து காயத்துக்குக் கட்டுக் கட்டிக் கொண்டு அப்புறம் போகலாம்!" என்றாள் சுபத்திரா.

இதற்குள்ளாகக் குதிரைக் காசாரியும் மாதவப் பிரஸாதின் வேலைக்காரர்களும் செய்தி கேட்டு ஓடி வந்தார்கள்.

குதிரைக் காசாரி குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு கோபத்துடன் கொத்தித்தின்று விடுபவன் போல் அதைப் பார்த்தான். சவுக்கை எடுத்து நான்கைந்து அடி கொடுத்து அதைப் படிமானத்துக்குக் கொண்டு வர வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது.

அதைக்கண்ட மாதவப்பிரஸாத், "ஜாக்கிரதை! அடிக்காதே, குதிரையை!" என்று கர்ஜித்தார்.

பழிவாங்கும் பகை எண்ணம் மாதவப் பிரஸாதுக்கு இல்லை என்பதை அறிந்த மனோரமா மனம் மகிழ்ந்தாள். (தொடரும்)

# நீங்கள் இன்று
# புரோடெக்ஸ்
# உபயோகித்தீர்களா?

நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க, உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட்
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.



ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.



குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்



நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.



மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.

# புரோடெக்ஸ்
## ஆல் பர்பஸ்
## டாய்லட் பவுடர்






சம்பந்தம்

## சுங்நூங் சொல்கிறான்:

என்னை ஏன் எல்லாரும் நூதனப் பார்வையோடு பார்க்கிறார்கள்! என்ன அதிசயம் இருக்கிறது என்னிடத்தில்! எல்லாரும் இருக்கிறாற் போல்தான் நானும் இருக்கிறேன். ஆனால் அவரவருக்கு வீடு வாசல், அப்பா அம்மா என்றிருக்கலாம். என்னிடத்தில் அவைகளிலொன்று கூடக் கிடையாதுதான். நான் சிறு வயதாயிருந்த பொழுதே தான் அப்பாவும் அம்மாவும் என்னை விட்டுப் பிரிந்து விட்டார்களே! நல்ல வேளையாக வீடு வாசல் என்று சேர்த்து வைத்து ஒரே இடத்தில் அடைந்து கிடக்கும் தண்டனையை எனக்குக்கொடுக்காமல் போனார்களே! இதோ இன்று பெபிங்கில் இருக்கிறேன். நாளைக்கே நான்கிங் போவேன். மறுநாள் காண்டனில் இருப்பேன்; கடல் கடந்து பர்மோசாவுக்குக்கூடச் செல்வேன். என்னை ஏன் என்று கேட்க யார் இருக்கிறார்கள்!

படிப்பில்லாத இந்த ஏழைக்குக் கௌரவம், அகௌரவம், பெருமை, சிறுமை எல்லாம் ஏது! என்னால் முடிந்த—ஏன்! முடியாத வேலைக்குக்கூட 'உம்' என்கிறேன். எந்த வேலையும் கிடைக்காவிட்டால் இருக்கவே யிருக்கிறது வீண் வம்பு! இதனால் 'போக்கிரி' என்ற பட்டப் பெயருக்கு ஆளாகும்படியாகி விட்டது.

நேற்றுப் பூங்காப் பக்கம் போயிருந்த பொழுது காண்டன் நகரத்து மிங்கவாங் கண்ணில் பட்டான். ஒரு தடவை என்னிடம் வம்புக்கு வந்து தன் முன் பல் இரண்டையும் இழந்திருக்கிறான் அவன். அதனால் நான் அவனைப் பார்த்தும் பார்க்காமல் இருந்தேன். ஆனால் அவன் என்னை அடையாளங் கண்டு பிடித்து 'எங்கே அந்தப் பக்கம் உன்னை ரொம்ப நாளாய்க் காணவே காணோமே!' என்று சொல்லிக் கொண்டே சென்றான். அப்பொழுது அவன் பொன் பல் இரண்டும் பளிச்சிட்டுக் காட்டியது.

ஆமாம். அவன் சொல்வதும் சரிதான். நான் எத்தனையோ தடவை இந்தப் பெபிங் நகரத்துக்கு வந்திருக்கிறேன். இருந்தும் இந்தத் தடவை கொஞ்ச நாள் நீண்டுதான் போய்விட்டது.

அதோ கையில் அழகான குடையுடன் அசைந்து அசைந்து வாத்து நடை நடந்து வருகிறாளே லூசி சியாங், அவள்தான் அதற்குக் காரணம்.

## லூசி சியாங் சொல்கிறாள்:

ஆஹா! புத்தர் கருணையே கருணை! அன்று அவர் சந்நிதியில் 'இவ்வுலகில் என்னை இப்படி நிராதரவராய் விட்டு விட்டாயே பெருமானே!' என்று மனங் கசிந்து வணங்கி நிமிர்ந்தபொழுது, மாங் பாட்டி என் எதிரில் வந்து நின்றாள். அதோடு நீ 'சியாங்' வம்சத்தைச் சேர்ந்தவள் தானே என்று வேறு வெடுக்கென என்னைக் கேட்டாள். என் கண் இரப்பைகளின் மென்மையிலிருந்தும், சப்பை மூக்கின் சாயலிலிருந்தும் அப்படிச் சரியா யறிந்தாளாம் என்னை. என்ன பண்பட்ட உள்ளம்! நான் அனாதையான கதையைக் கேட்டு அவளும் துணுக்குற்றாள். திபெத்து தேசத்துப் பௌத்த மடத்தில் பணியாற்றி வரும் தூர பந்து ஒருவரை அவளுக்குக் குறிப்பிட்டேன். "ஆ! அப்படியா! பிறகு நீ கூட என் தூர உறவு ஆகிறாயடி" என்று கட்டியணைத்துக் கொண்டாள். அப்பொழுதே இத்தோட்ட வீட்டுக்கு என்னைக் கையோடு அழைத்து வந்து விட்டாள்.

அன்றையிலிருந்தே நான் மாங் பாட்டியின் உடைமையானேன். அவளுக்கும் மக்கள் மனிதர் என்று ஒருவரும் இல்லை என்றுதான் தெரிகிறது. விதம் விதமான உடுப்புகள் தைத்துக் கொடுத்து என்னை எத்தனையோ அன்புடன் பராமரித்தாள். நானும் பிரதியுபகாரமாக அவளுக்கு எத்தனையோ உதவியா யிருந்தேன். ருசி ருசியாய்ச் சமைத்து வேளா வேளைக்கு அவளுக் கிடுவதிலிருந்து, இரவில் படுக்கையைத் தட்டிப்போடும் வரை நானேதான் செய்து வந்தேன். அதோடு பாட்டிக்குச் சமயா சமயத்தில் மார்வலி வந்துவிடும். பாவம்! கண்களில் தாரை தாரையாய் நீர் வழிய அப்பொழுது அவள் புழுவாய்த் துடித்துப் போவாள். அவளுக்குச் சிசுருஷை செய்துகொண்டே யிருப்பேன். நான் பணிவிடை புரிவதைக் கண்டு மகிழ்ந்து போய் 'சமயத்தில் உதவிக்கு வந்த தேவ கன்னி' என்று சொல்லி என்னை முத்தமிடுவாள்.

பாட்டிக்குத்தான் என்மேல் எத்தனை பிரியம்! கேட்டவர்களுக் கெல்லாம் என்னைப் பேத்தி யென்றே சொன்னாள். திபெத்து நாட்டிலிருந்து திரும்பி யிருப்பதாகவும் தெரிவித்தாள்.

## மாங் பாட்டி சொல்கிறாள்:

என்ன செல்வமிருந்துதான் என்ன பயன்! உற்ற சமயத்தில் உதவிக்கு வர எனக்கென்று ஒருவரும் இல்லையென்றால் அதில் என்ன பிரயோசனம்! உம்...இப்படி இரண்டு வருஷங்களுக்குள் இப்பொல்லாத யுத்தத்தினால் நான் அனைவரையும் இழந்து அனாதையாவேன் என்று கனவில்கூட எண்ணவில்லையே! புத்தர் பெருமானைத்தான் நம்பி வாழ்ந்தேன். கடைசியில் அவர்தான் எனக்கு

லூசி யொங்கை அளித்தார். ஏதோ நானும் சியாங் வம்சத்தைச் சேர்ந்தவளாதலால் அவனை உடனே அடையாளங் கண்டு கேட்க முடிந்தது.

அவளைப் பற்றி ஒரு குறையும் சொல்வதற்கில்லை. நல்ல பதவிசான பெண். என் சொந்தப் பேத்தி இருந்தால்கூட என்மேல் இத்தனை அன்பு செலுத்துவாள் என்று நான் உறுதி கூறமுடியாது.

என்னை ஒரு காரியமும் செய்ய விடுவதில்லை. எல்லாவற்றையும் அவளேதான் கவனித்துக் கொள்கிறாள். அவள் வீட்டை வைத்துக் கொள்ளும் விதத்திலும், சமைத்துப் பரிமாறும் தோரணையிலும் பெரிய இடத்துப் பண்பாடு புலனாகிறது.

விளையாட்டாய் வருஷங்கள் ஒன்றன் பின் ஒன்றாக ஓடிக்கொண்டே யிருக்கின்றன. லூசி சியாங்கும் கிடுகிடுவென வளர்ந்து விட்டாள். உற்ற வயதில் அவளை ஒருவனிடத்தில் ஒப்படைத்து விட்டால் நன்றா யிருக்கும். அவளை விட்டுப் பிரிய எனக்கு மனமே யில்லைதான். என்ன செய்வது! அவளைக் கலியாணம் செய்து கொண்டு நம் வீட்டோடு தங்கிவிடும் மாப்பிள்ளையா யிருந்தால் எத்தனையோ நன்றா யிருக்கும்! எப்படியோ அவள் பெண்மைக்குப் பேராதரவு கிடைத்தால் என் மனப் பளு இறங்கிவிடும். பொறுத்திருந்து பார்ப்போம். புத்தர் கருணையிலே சீக்கிரத்தில் ஏதாவதொரு வழி பிறக்காமலா போய்விடும்!

## லூசி சியாங் சொல்கிறாள் :

அப்பொழுதுதான் மாம் பாட்டிக்கு மார்பு வலி வந்து சற்றுத் தேவலை யாயிற்று. அயர்ந்து தூங்க ஆரம்பித்தாள். நான் ஏதோ காரியமாகக் கொல்லைப் பக்கம் சென்றேன். அத்திப் பழம் வாசனையும் அன்னாசிப் பழம் வாசனையும் சேர்ந்து என் மூக்கைத் துளைத்தன. இன்றைக்காவது இவைகளைப் பறிக்கச் சொல்லிக் கடைத் தெருவுக்கு அனுப்ப வேண்டுமே என்று தோட்டக் காரனுக்காகச் சுற்று முற்றும் பார்த்தேன். தூரத்தில் அத்தி மரத்தினடியில் அவன் படுத்து உறங்கிக் கொண்டிருந்தது இங்கிருந்தே எனக்குத் தெரிந்தது. உடனே ஒரு கோப்பைத் தண்ணீரை யெடுத்துக் கொண்டு அவனிடம் சென்றேன்.

மார்புச் சட்டை திறந்து கிடந்ததால், அவன் ஒட்டிய வயிறு நன்றாய்த் தெரிந்தது. பாவம்! சாப்பிடவேயில்லை போலிருக்கிறது! ஒரு தடித்த வேரின் மேல் தலையை வைத்துக் கொண்டு படுத்திருந்தான். அவன் தலையை அந்தப் பக்கம் திருப்பிக் கொண்டிருந்ததால், முகத்தின் மேல் தண்ணீரை ஊற்றுவதற்கு எனக்குச் சற்று அசௌகரியமாகத்தா னிருந்தது. இருந்தும் இங்கிருந்தே பலமாய் வீசி ஊற்றினேன். அவன் அலறிக் கொண்டெழுந்ததைப் பார்க்கவேண்டுமே! இடுப்பில் கை வைத்துக் கலகல வென நகைத்தேன் நான். ஆனால், என்ன ஆச்சரியம்! "மேலே ஊற்றின தண்ணீரை என்னிடம் கொடுத்திருந்தால் குடித்திருப்பேனே!" என்று ஒரு புதுக் குரலல்லவா என் காதில் விழுந்தது!

அப்பொழுதுதான் என் கண்களை அகலத் திறந்து பார்த்தேன். யாரோ வேற்று மனிதனா யிருந்ததைக் கண்டு திடுக்கிட்டே போனேன்.

அவன் எழுந்து, களைப்பு மேலிட்டால் அப்படியே சாய்ந்து கொண்டு விட்டான். பார்க்கப் பரிதாபமாக யிருந்தது எனக்கு. உடனே, செய்த குற்றத்திற்குப் பிராயச்சித்தமாகவாவது இருக்கட்டு மென்றெண்ணி அவசர அவசரமாய் உள்ளே ஓடி வந்தேன். கோப்பை நிறையச் சோற்றைப் போட்டு வெந்நீரை ஊற்றிக் கொண்டு, அதை அள்ளிச் சாப்பிட இரண்டு குச்சிகளையும் எடுத்துப் போட்டுக் கொண்டு ஓடினேன். அதை அவனெதிரில் வைத்துவிட்டு, குடிக்கத் தண்ணீரும் கொடுத்தேன். ணங்ணங்கென்று குச்சியைத் தட்டி, ஒரே நிமிஷத்தில் கோப்பையைக் காலி பண்ணினான். பிறகுதான் தண்ணீரினால் முகத்தைத் துடைத்துத் தலைமயிரை ஒதுக்கிக் கொண்டான். பாவம்! பசியிலிருந்து அவனுக்கு விடுதலை கிடைத்தது.

புஜங்களில் செக்கச் செவேலென்று நரம்புகள் புடைத்து நிற்க ஏதோ தங்க விக்கிரகம் மாதிரி



பிருந்தான். நான் அவனையே பார்த்து நின்றேன். 'சமயத்தில் ஏதோ வனதேவதை மாதிரி வந்து எனக்கு உதவி செய்தாயே, உனக்கு ஆயிரங் கோடி வணக்கம்'' என்று சொல்லி யெழுந்தான். அவனுடைய உருண்ட தோள்களையும் பரந்த மார்பையும் பார்த்து நின்ற எனக்குப் பதிலொன்றும் சொல்லத் தோன்றவே யில்லை. அதற்குள் தோட்டக்காரனும் அங்கு வந்தான். உள்ளிருந்து பாட்டி கூப்பிட்ட குரலும் கேட்டது. அவனைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே நடந்தேன். அப்பொழுது ''என்ன சொல்கிறான் அந்தப் போக்கிரி சுங்குந் !'' என்றான் தோட்டக்காரன். ''அவனா போக்கிரி!'' என்று அப்படியே திகைத்து நின்று விட்டேன் நான்.

## சுங்குந் சொல்கிறான் :

அன்றையிலிருந்து என் மனத்தில் என்னை யறியாத ஒருவிதச் சலனம் ஏற்பட்டது. நான் எங்கு சென்றாலும் எந்த வேலையி லீடுபட்டாலும் அந்த அழகிய பெண்ணின் இனிய முகம் என்னைச் சுற்றிச் சுற்றி வந்தது. எனக்கு இதுவரை ஏற்பட்டிராத ஒரு புது அநுபவம் அது. 'அந்தப் பேரழகியின் அந்தஸ்து என்ன ! நம் அந்தஸ்து என்ன !' என்று எண்ணி அவளை மறக்க எண்ணினேன். ஆனால் அவள் இரவு வேளையில் கனவிலும் தோன்றி என்னைக் கிறுகிறுக்கச் செய்தாள்! எத்தனை நாள் அவ் வேதனையைச் சகிப்பேன் !

கடைசியில் ஒருநாள் எதற்கும் அந்தப் பக்கம் மறுபடியும் ஒரு தடவை சென்று பார்ப்போம் என்று புறப்பட்டு வந்தேன். அத் தோட்டத்தை நெருங்க நெருங்க என் கால்கள் தயங்கின. ஆனால் என்ன ஆச்சரியம்! அதே அத்தி மரத் தடியில் ஊசி யொசிங்கும் யாரையோ எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தாள் !

நான் சென்று எதிரில் நின்றேன். வியப்புடன் அவள், '' நீர்தானே சுங்குந் !'' என்றாள்.

'' ஆமாம் '' என்பதற் கறிகுறியாய்த் தலையை யசைத்தேன் நான். உடனே தன் மீற்றுக் கண்களை அகலத் திறந்துகொண்டு என்னை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தாள். '' உண்மையாகவா ! உம்மைப் பொல்லாத போக்கிரி என்று சொல்லிக் கொண்டார்களே !'' என்றாள்.

அதைக் கேட்டதும் எனக்கு யாரோ முதுகில் சுளீர் என்று சவுக்கினால் அடித்தாற் போலிருந்தது. சற்று நெளிந்து கொடுத்துக் கொண்டேன். நம்மைப் பற்றி இதைக் கூடத் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறாளே என்ற ஒருவித இன்பமும், இந்தப் பொல்லாத ஜனங்கள் இப்படி அநியாயமாய் நமக்கு இந்த அவப் பெயரை ஏற்படுத்தி விட்டார்களே என்ற துன்பமும் கலந்து ஒரு அதிருப்தி நிலையிலிருந்தேன் நான். என் பூர்வ பாவம் அவளுக்குத் தெரியாமலா இருந்திருக்கும் ! இருந்தும் '' யார் சொன்னது அப்படி !'' என்று சற்று நிமிர்ந்து பேசினேன்.

'' அப்படி யிருக்க முடியாதென்றுதான் நானும் சந்தேகித்தேன். நான் முகத்தில் தண்ணீர் கொட்டிய அன்றைக்கு, எத்தனையோ நல்லபடியாகத் தான் நடந்துகொண்டீர்கள் !'' என்றாள் அவள்.

'' பார்த்தாயல்லவா ! உலகம் பொய் '' என்றேன் நான். என்ன சாகசம் அந்தப் பெண்ணுக்கு ! '' இருந்தாலும் நீர் ஒரு போக்கிரிதான் '' என்று சொல்லிக்கொண்டே பக்கத்து மரத்தைப் பார்க்கச் சென்றாள். நானும் வளர்த்த பூனை போல் அவளைப் பின்தொடர்ந்தேன்.



டில்லி தமிழ் விழாவின் கலைக்காட்சியில் ஓவியர்கள் பாலு சகோதரர்களின் ஓவியங்களை மத்திய சர்க்கார் நிதி மந்திரி தேஷ்முக் அவர்களும், ரயில்வே உதவி மந்திரி ஸ்ரீ அழகேசனும் பார்த்து ரசிக்கிறார்கள். படத்தில் இருக்கும் காந்திமகான் ஒரு வயோதிக நோயாளிக்குப் பரிவுடன் சிகிச்சை செய்யும் சித்திரம் தஞ்சைக் கலைக் காட்சியில் பரிசு பெற்றது.

---

'' ஒரு பெண்ணின் பின்னால் தொடர்ந்து வருவது போக்கிரித்தன மில்லையா !'' என்று என்னை மடக்கினாள் அவள். உடனே எனக்குச் ' சுருக் ' கென்றது. '' நான் போக்கிரி யென்றால், நீ ஒரு பலே போக்கிரியாயிற்றே !'' என்றேன்.

''அது எப்படியாம்!'' என்று நிமிர்ந்து கேள்விக் குறியைத் நீட்டினாள் அவள்.

'' அன்று என் முகத்தில் தண்ணீர் ஊற்றினது போக்கிரித்தனம் இல்லையா ! அதோடேயா விட்டாய் ! கடைசியில் வீட்டுக்குத் திரும்பினபொழுது என் உள்ளத்தை வேறு பகற் கொள்ளை யடித்துச் சென்று விட்டாயே ! அது எவ்வளவாம் ! உண்மையாகவே நான் இத்தனை நாளும் உன் நினைவாகவே கிடந்தேன், ஊசி யொசிங் !'' என்றேன். எப்படியோ அவளிடம் நாசுக்காகப் பேசிவிட்டேன்.

அதற்கு முன் தினம் ஒரு சினிமாவுக்குப் போயிருந்தேன். அதில் வந்த கதாநாயகனும் கதாநாயகியும் அப்படித்தான் பேசிக்கொண் டிருந்திருப்பார்களோ ! அதைக் கேட்டு அவள் முகம் எப்படியோ மாறிற்று. சுன்றாய் மரத்தில் சாய்ந்து கொண்டு ஆகாயத்தைப் பார்த்த வண்ணம் '' நானுந்தான் தினந் தவறாமல் வந்து இம்மரத்தடியில் காத்திருந்து செல்கிறேன் '' என்றாள். உடனே என் உடல் முழுவதும் ' ஜில் ' லென்ற ஒருவித உணர்ச்சி உண்டாயிற்று.

'' ஆ ! உண்மையாகவா !'' என்று திக்கிப் பேசினேன். அதற்குள் மாங் பாட்டி கூப்பிடும் குரல் கேட்கிறதென்று வீட்டினுள் சென்று விட்டாள்.

## மாங் பாட்டி சொல்கிறாள் :

என்னமோ ஒருவர் இருவர் பராபரியாய்ச் சொல்லிக் கொள்கிறார்கள், லூசி யொங்கும் கங்கூங்கும் பழகிக் கொள்கிறார்களென்று. எத்தனை தூரம் அது நிஜமோ! "அவனைப் பொல்லாத போக்கிரி யென்று சொல்லிக் கொள்வார்களே!" என்று அப்பொழுதே யாரையோ கேட்டு வைத்தேன். "அதெல்லாம் அப்பொழுது. உன் பேத்தியிடம் பழக ஆரம்பித்ததிலிருந்து அவன் அடியோடு மாறிப் போய் விட்டான். தினம் லூசி யொங் புத்தர் கோவிலுக்குப் போகும்பொழுது, அவனும் தவறாமல் கோவிலுக்குப் போகிறான். இன்னும் ஒழுங்காய் இருந்துகொண்டு அவரவர்களுக்கு வேண்டிய உதவிகள் செய்கிறான். இப்பொழுது அவன் நடவடிக்கையைக் கவனித்தவர்கள், 'இவனா கங்கூங்!' என்பார்கள்" என்றார்கள்.

பிறகு எனக்குத் திருப்தியாய்ப் போயிற்று. அப்படித்தான் இருக்கட்டுமே! கல்யாணத்தையும் முடித்து வைத்து விடுவோம் என்றிருந்தேன் நான்.

அதோடு இந்தப் பொல்லாத மார்பு வலியோடு எத்தனை நாள்தான் போராடிக் கொண்டிருப்பேன் நான்! எத்தனையோ தடவை வலி பொறுக்க முடியாமல், உயிரையே மாய்த்துக் கொள்ளக் கூடத் தீர்மானித்தேன். அப்பொழுதெல்லாம் லூசி யொங்கின் ஞாபகம் வந்து விடும். 'அவளுக்கு ஒரு ஏற்பாடு பண்ணின பிறகுதான்' என்று தீர்மானித்து ஒத்திப் போட்டுக் கொள்வேன்.

ஆனால் லூசி யொங் பொல்லாத பெண். இதைப் பற்றி ஏதாவது ஒரு வார்த்தை வெளியிட வேண்டுமே! நானும் அவளை எப்படி எப்படியோ பேச்சில் மடக்கிப் பார்த்தேன்; நான் கோலத்தில் புகுந்தால், அவள் தட்டியில் புகுந்தாள்.

பாவம்! இளங் குமரிதானே! தன் இதயத்தை என்னிடம் எப்படித் திறந்து காட்டுவாள்! இருந்தும் ஒன்றன்பின் ஒன்றாக மாதங்கள் ஓடிக்கொண்டிருக்கின்றனவே!

## லூசி சியாங் சொல்கிறாள் :

கடைசியில் 'காதல்' பெரிதா, 'கடமை' பெரிதா என்ற சிக்கலில் மாட்டிக்கொண்டு விட்டேன். அன்றைக்குப் பாட்டி சொன்னாள். அமெரிக்காவி லிருக்கும் அவள் தூரபந்து ஒருவருக்கு அகாலத்தில் நாலைந்து குழந்தைகளை விட்டு அவர் மனைவி இறந்து விட்டாளாம். அவர் மறு கல்யாணத்திற்குச் சீன தேசம் வருகிறாராம். என்னைக் கொடுத்து விடுவதாக அவருக்குக் கடிதம் கூட எழுதி விட்டாளாம் பாட்டி. அடிக்கடி அங்கேயும் இங்கேயும் போய்க் கொண்டிராமல் ஆங்கிலம் கற்றுக் கொள்ளடி. நீ அமெரிக்கா போகிறவளாயிற்றே!" என்றாள்.

அவ்வார்த்தைகளைக் கேட்ட எனக்குத் தலையில் பேரிடி விழுந்தாற் போலிருந்தது. இத்தனை நாள் பழகிக் கொண்டு வந்த கங்கூங்கை எப்படிப் பிரிவேன் நான்!

இருந்தாலும் இப்பொழுது நான் உயிரும் உடலுமாய் இருப்பதே மாங் பாட்டியின் ஆதரவினால் தானே! பிறகு அவள் வார்த்தையை நான் எப்படித் தட்ட முடியும்! மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு, ஒரு நாள் கங்கூங்கிடமும் விஷயத்தை விவரித்து என்னை அடியோடு மறந்து விடும்படி சொல்லி விட்டேன். "ஆ! அந்தக் கிழவிக்கு அத்தனை யாகிவிட்டதா! அவளை உயிரோடு விட்டு வைக்கிறேனா, பார்!" என்று உறுமினான். அதைக் கேட்டதும் எனக்குக் 'கரேல்' என்றது.

பாட்டி யிடமும் சூசகமாக "ஏன் பாட்டி அவர் இங்கே வரவேண்டும்! நாமே அமெரிக்காவுக்குப் போய் விட்டால் என்ன! நீங்களுந்தான் இந்த வீட்டில் எத்தனை நாள் அடைந்து கிடப்பது!" என்று சொல்லிப் பார்த்தேன்.

"உம்...நானாவது இந்தத் தள்ளாத வயதில் அமெரிக்காவுக்கு வருகிறதாவது! என் மூச்சு இந்தச் சீன தேசத்தில் தான் பிரிய வேண்டும்!" என்று அடித்துச் சொல்லி விட்டாள். நான் என்ன செய்யட்டும்! தினம் வெளியில் சென்று வீட்டுக்குத் திரும்பும் பொழுதெல்லாம், பாட்டி உயிரோடு இருக்கிறாளோ அல்லது கொலையுண்டு கிடக்கிறாளோ என்று சந்தேகப்பட்டுக் கொண்டுதான் நுழைவேன். கங்கூங்கின் வார்த்தைகள் சாதாரண மொழிகள் இல்லையல்லவா!

## கங்கூங் சொல்கிறான் :

அன்று லூசி யொங் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு எனக்கு உலகமே அஸ்தமித்து விட்டது போலிருந்தது. அவளை எப்படிப் பிரிந்திருப்பேன் நான்! பாவம்! அவளுந்தான் துடிக்கிறாள். அதே சமயத்தில் 'கடமை'தான் பெரிதென்று வாதாடுகிறாள். என் வாழ்க்கையையே மறுமலர்ச்சியடையச் செய்தவளாயிற்றே அவள்! அப்பொழுதே நான் அந்த மாங் பாட்டியைத் தீர்த்துக் கட்டி விடுகிறதென்று தீர்மானித்து விட்டேன்.

அப்படியே ஒருநாள் முன்னிரவு வேளையில் கத்தியைத் தீட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டேன். அப்பொழுது அமெரிக்கா செல்லப் போகும் லூசி யொங் ஆங்கிலம் கற்றுக் கொள்ள வெளியில் சென்றிருப்பாள் என்பதை நான் முன்னமேயே அறிந்து வைத்திருந்தேன்.

அது தோட்ட வீடா யிருந்ததால் எனக்குச் சௌகரியமாய்ப் போயிற்று. மெதுவாய் மதிலேறிக் குதித்தேன். வாசல் கதவு திறந்து கிடந்தது. மெதுவாய் அடிமேல் அடி வைத்து உள்ளே நுழைந்து கதவுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டேன். முன் ஹாலில் மாங் பாட்டி ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்து கிடந்தாள். சரியான சமயம் என்று கத்தியை உருவினேன்.

அதே சமயத்தில் அவள் மார்பைப் பிடித்துக் கொண்டு கீச்சென்று கத்தினாள். ஒரு வேளை இங்கிருந்து கொண்டே கத்தியைப் பாய்ச்சி விட்டோமோ என்று கூடத் தோன்றிற்று எனக்கு. ஆனால் கத்திதான் இன்னும் என் கையிலேயே இருந்ததே! அதற்குள் பாட்டி துடியாய்த் துடித்தாள். கண் விழிகள் பிதுங்கி வந்தன. அப்பொழுதுதான் அவளுக்கு அடிக்கடி மார்பு வலி வருமென்று லூசி யொங் சொன்னது ஞாபகம் வந்தது எனக்கு. உடனே கத்தியைக் கீழே போட்டு விட்டு அவளருகில் ஓடினேன். பாவம்! துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தாள் கிழவி. பார்க்கப் பரிதாபமா யிருந்தது. என் கண்களும் இலேசாய்க் கலங்கின. அருகில் அமர்ந்து அவள் மார்பைத் தடவிக் கொடுத்தேன். தண்ணீர், தண்ணீர் என்று ஜாடை காட்டினாள். ஜாடியிலிருந்த தண்ணீரைக் கோப்பையில் ஊற்றிச் சிறிது சிறிதாக அவள் வாயில் ஊற்றினேன்.

அப்பொழுதுதான் செருப்பு சப்திக்க லூசி யொங் உள்ளே நுழைந்தாள். அங்கிருந்த சூழ்நிலையைக் கண்டு 'கீச்'சென்று கத்தி விட்டாள். நான் ஒரு சங்கடமான நிலையில் இருந்தேன்.

# அதிகப்படி தெம்பு



நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

தெம்புடன் விளங்குக……… உங்கள் தினசரி போஜனத்துடன் வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிட்டு வருக…… அது சுறுசுறுப்பூட்டுவதும் ருசிமிகுந்ததுமான ஒரு டானிக். அதிகப்படி தெம்பை வளர்க்க உதவுவதில் நிச்சய குணமுள்ளது. வாட்டர்பரீஸ் காம்பவுண்டு உங்களுக்கு அத்யாவசியமான புஷ்டிபதார்த்தங்களை வழங்கி, உங்களுக்கு சோர்வு, ஜலதோஷம், இருமல், எதுவும் ஏற்படாத வாறு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கும் வயது வந்தவர், இளைஞர் யாவருக்கும் தேக வலிமை பெற இன்றியமையாதது.






**WATERBURY'S**

**COMPOUND**

**வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்**

NAS. 59-53 உங்களை தெம்புடன் வைத்திருக்கும்

அதற்குள் பாட்டிக்குச் சுய உணர்வு வந்து விட்டது. "ஏன் அப்படி கத்துகிறாய், லூசி சியாங்! இந்த மகானுபாவர் சரியான சமயத்தில் உதவிக்கு வந்திரா விட்டால், நான் இத்தனை நாழிகை இறந்தே போயிருப்பேனே! இனிமேல் அந்த அமெரிக்கப் பிள்ளையை அடியோடு மறந்து விடு. இவர்தான் உனக்குக் கணவர்!" என்று அவன் கரத்தைப் பற்றி என்னிடம் கொடுத்தாள்.

### சுங் சூங்கும் லூசி சியாங்கும்:

பிறகு எங்கள் இருவர் முகங்களும் மலர்ந்தன. நடந்த அனைத்தையும் சொன்னோம். ரொம்பவும் அசிரத்தையாக கேட்டுக் கொண்டே எழுந்தாள் பாட்டி. அப்பொழுது அவள் மடியிலிருந்து ஒரு சீட்டு கீழே விழுந்தது. அதை எடுத்து வாசித்தோம். "என் வலி பொறுக்க முடியாமல் நானே தற்கொலை செய்து கொண்டேன். ஒருவரையும் சந்தேகிக்கவேண்டாம். என் சொத்துக்கள் அனைத்தும் லூசி சியாங்கிற்கும் அவள் காதலன் சுங் சூங்கிற்கும் சேர வேண்டியது" என்று எழுதியிருந்தது. "இது என்ன பாட்டி!" என்று இருவரும் கத்தினோம். "வேண்டுமென்றே ஒரு அமெரிக்க மாப்பிள்ளையைக் கற்பனை செய்து நடத்த நாடகம் இது. சுங் சூங்கின் கத்திக் குத்தை எதிர் பார்த்துக் கொண்டு தினம் நான் தயாராயிருந்தேன். கடைசியில் எதிர்பாராத விதமாய் மார்பு வலி வந்து முடிவைச் சற்று மாற்றி விட்டது! இனிமேல் அந்தச் சீட்டுக்கு வேலையில்லை. கிழித்தெறியுங்கள்" என்றாள்.

அவள் வார்த்தைகள் எங்கள் மூலாதாரத்தையே அசைத்து விட்டன. "ஆ! பாட்டி! எங்களை வாழ்விக்க வந்த தெய்வம்!" என்று இருவரும் ஓடி அவள் காலில் விழுந்தோம்.

# சாகுந்தலம் – மேகதூதன்

பார் உள்ளளவும் பஞ்ச பூதங்கள் உள்ளளவும் அழியாப் புகழ் பெற்று விளங்குபவை காளிதாஸனின் நாடகங்கள். அக் கவிஞர் கோமகன் இயற்றிய காவியங்கள் அன்பு, அழகு, இன்பம் முதலிய உலகியல் லட்சியங்களை நாடி நின்று குன்றாக் கலையுடன் திகழ்கின்றன.

அவைகளுள் சாகுந்தலம் சாகாவரம் பெற்ற சாசுவத இலக்கியம்; அழகுச் சுவை ததும்பும், உள்ளத்தை உருக்கும் உணர்ச்சி மிக்க நாடகம்.

வனப் பிரதேசத்தில் வளர்ந்த சகுந்தலையினிடம் மாட மாளிகையில் வளர்ந்த மன்னர் மன்னன் காதல் கொண்டான்; கன்னிகையும் காவலனிடம்தன் கருத்தைப் பறி கொடுத்தாள். இந்தக் காதல் காரணமாக எத்தனை சிக்கல்கள்! எத்தனை கோப தாபங்கள்! மேற்படி காதல் நிகழ்ச்சி, ஒரு நாடகத்துக்கு வேண்டிய நவரஸங்களும் ததும்பும் கட்டங்களை இயல்பாகவே பெற்று அந்த அற்புதமான காவியத்துக்கு அமரத்வம் அளித்து விட்டது.

கவி காளிதாசனுடைய கற்பனைக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குவது மேகதூதன் என்னும் காவியம்; அவருடைய இன்பக் கற்பனைப் பூங்காவில் உதித்த ஒப்பற்ற சொல்லோவியம்.

அச்சிறந்த காவியத்தில் ஒவ்வொரு சுலோகமும் காவிய ரஸத்துடன் ஓவிய உருவத்தையும் ஒருங்கே கொண்டு உள்ளத்தை உருக்கும். வடமொழி சுலோகங்களைப் படித்துக் காளிதாசனின் கற்பனைகளில் கருத்தைப் பறிகொடுக்கும்போது, நம் அகக் கண்ணில் தோன்றும் சித்திரக் காட்சிகள் நம்மைப் புளகமுறச் செய்யும்.

காதலியை விட்டுப் பிரிந்து தனிமையில் வாடிய யக்ஷன் ஒருவன் தன் வசம் இழந்து காதல் வசப்பட்டு, தொலை தூரத்திலிருக்கும் தன் காதலியிடம் கார்முகிலைத் தூதனுக அனுப்புகிறான். அவன் உள்ளத்தில் மண்டியெழுந்த காதல் தீயே மேகதூதன் என்னும் கவினுறு காவியம்.

இந்த இணையற்ற இலக்கியத்துக்கு, சுலோகத்தின் பதவுரையோடு அதன் கற்பனைச் சித்திரத்தில் பதிந்து கிடக்கும் இனிய கருத்துக்கள், "சித்திர விளக்கம்" என்னும் குறிப்பின் மூலம் மிகவும் அழகாக விளக்கப் பட்டிருக்கின்றன.

"சாகுந்தலம்", "மேக தூதன்" என்னும் இந்த மகா காவியங்களில் இரண்டையும் ஸ்ரீ க. சந்தானம் இனிமையான தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார்; சுலோகங்களுக்கு நேர் மொழி பெயர்ப்பாக எளிய தமிழ் நடையில் விளக்கங்கள் எழுதியிருக்கிறார். ஒரு விளக்கத்தைப் பார்ப்போம்.

அதிரூப சௌந்தர்யவதியான சகுந்தலையைக் கண்ட துஷ்யந்தனின் மனதில் ஓர் இன்பக் கிளர்ச்சி ஏற்படுகிறது. அவன் நினைக்கிறான்:




"நுகராத மலர்; கிள்ளாத பசுந்தளிர்; வெட்டாத வைரக் கல்; சுவைக்காத புதியதோர் இனிய தேன்; புண்ணியம் அனைத்தும் பலித்தது போல் மாசில்லா மேனி; இதை அநுபவிக்கப் பிரமன் படைத்த பாக்கியசாலி எவனோ?"

இந்த மாதிரி இன்னும் எத்தனையோ அழகு அழகான கருத்துக்கள் இந்நூலில் அசல் தமிழாகவே மிளிர்கின்றன.

காளிதாஸனின் கம்பீரமான காவியங்கள் இனிமைக்கும், உயர்வுக்கும் சொல்லழகுக்கும், பொருளாழத்துக்கும் பிரசித்தி பெற்றவை. அவரது வாக்கில் கலைத்தேவி பிரசன்னமாயிருந்தாள்.

அத்தகைய இணையற்ற இலக்கியத்தைத் தமிழாக்குவது சிரம சாத்தியமான காரியம். வடமொழிக்காவியத்தின் சுவையைத் தமிழரும் நுகரச் செய்வது எளிதல்ல; ஸ்ரீ சந்தானம் அந்தக் காரியத்தை மிகவும் வெற்றிகரமாகச் செய்திருக்கிறார். இந்நூல், வளரும் தமிழ் வசன இலக்கியத்துக்கு ஒரு புது அணிகலனாக விளங்குகிறது. இம்மாதிரி ஆழ்ந்த கருத்துக்கள் நிறைந்து விளங்கும் வடமொழி இலக்கியங்கள் இன்னும் பல தமிழில் வரவேண்டும்.

தமிழாக்கியவர்: கனம் க. சந்தானம், லெப்டினெண்ட் கவர்னர், விந்தியப் பிரதேசம்; பிரசுரம்: சுந்தரப் பிரசுராலயம், கெ. 193, மவுண்ட் ரோடு, சென்னை-2 விலை: ரூ. 5.

# SANDOW



ஸாண்டோ

உறுதிக்கும்
பிழையின்மைக்கும்

**FAVRE-LEUBA**

பேவர்-லூபா : பம்பாய் : கல்கத்தா







# அயர்ந்து சுகமாகத் தூங்குங்கள் !

நம் தேகத்திற்கு அயர்ந்த தூக்கம் மிகவும் முக்கியம். ஏனெனில் தூக்கத்தின் போது இயற்கையானது உடலுக்கும் மூளைக்கும் சக்தியை ஊட்டுகிறது. படுக்கப் போகுமுன் ஒரு கப் ருசி மிகுந்த 'ஓவல்டின்' இயற்கைக்கு இரு விதங்களில் உதவுகிறது- புத்துணர்வைத் தரும்; அயர்ந்த தூக்கத்தைத் தரும். அத்துடன் செலவாகும் சக்தியை சேகரிக்க உதவுகிறது. ஓவல்டின் எல்லா விதங்களிலும் சிறந்தது. அதில் பழுத்த பார்லி மால்ட், ஆடைநிரம்பிய சுத்தமான பசும்பால், சிறந்த கொக்கோ, பாஸ்பேட்டுகள், பி&டி விடமின்களும் இருக்கின்றன. உங்கள் கடையில் இந்த ருசி மிகுந்த உணவு பானத்தைக் கேட்டு வாங்குங்கள்; நினைவிருக்கட்டும். அது ஓவல்டின் தானா என்று கவனியுங்கள்!




விநியோகஸ்தர்கள் :
கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) லிட்.

# ஓ வ ல் டி ன்

உலகில் சிறந்த ஆரோக்கிய பானம்

OV.3[illegible]

# யோகாசன சிகிச்சை

வி. என். குமாரஸ்வாமி

## 3. யோக ஆசன சிகிச்சை முறை

யோக ஆசன சிகிச்சை என்றதும், வெறும் ஆசனங்களால் மட்டும் நோய்களைப் போக்கடித்து விடலாம் என்று எண்ணக் கூடாது. எந்த வைத்திய முறையானாலும் வெறும் மருந்தை மட்டும் சிபாரிசு செய்வதில்லை. அந்தந்த நோயின் நிலைக்குத்தக, உடல் நிலைக்குத்தக பத்தியமும் உண்டு. அதைப் போலவே யோக ஆசன சிகிச்சைக்கும் பத்தியம் உண்டு. அத்துடன்கூடப் பிராணாயாம சிகிச்சையும் உண்டு. பின் சாந்தி ஆசனத்தில் தன்மொழித்துதியும் செய்ய வேண்டும். இவைகளெல்லாம் நோயாளிகளே செய்ய வேண்டியது. ஆசன சிகிச்சை அளிக்கும் யோக வைத்தியர் ஏற்கெனவே ஆசனப் பிராணாயாமத்தினால் சேகரித்து வைத்திருக்கும் சக்தியைச் சிறிது செலுத்தலாம்.

இது யோக வைத்தியரின் சேமிப்புச் சக்தியைக் குறைக்கும். இது மிக மிக அவசியமானபோது உபயோகிக்க வேண்டும். மற்றப்படி நோயாளியின் உடலில் உள்ள நோய் விலக உத்தரவிடல் செய்யலாம். சிலர் இதை மெஸ்மெரிஸத்தால் செய்கின்றார்கள். இம் முறை எதுவரை சரி என்பது இன்னமும் விவாதத்திற்குரிய விஷயமாக இருக்கின்றது. ஒரு முடிவுக்கு இன்னமும் வந்த பாடில்லை. எனவே, நாம் சாதாரண, ஜாக்கிரதை நிலைமையிலேயே அதாவது புத்தியை மழுங்கச் செய்யாமல் செய்யலாம்.

நோய்க்கு யோக சிகிச்சை அளிக்கவேண்டுமானால் ஆரம்பத்திலேயே ஆசனங்களைச் செய்விப்பது அல்ல. நோயின் தன்மை என்ன! அது எந்த ரகத்தைச் சேர்ந்தது என்பதை முதலில் தீர்மானிக்க வேண்டும். நோய்கள் பல விதம் உண்டு. தானே தன் அஜாக்கிரதையினால் தேடிக் கொள்ளும் நோய் தொத்து நோய், பரம்பரை நோய் என்று பிரிக்கலாம்.

தானே தன் அஜாக்கிரதையினால், ஆரோக்கியக் கட்டு இட்டங்களை மீறுவதினால் உண்டானதாய் இருந்தால் பெரும்பாலும் ஆசனப் பிராணாயாம ஆகார நியமங்களால் குணப்படுத்தி விடலாம். அதிக மோசமான நிலைமையில் இருந்தால் சிறிது மருந்து வகைகளும் உபயோகிக்க வேண்டியதாய் இருக்கும். தொத்து நோய்களாய் இருந்தால் ஆசனம், பிராணாயாமம், ஆகார நியமம், மருந்து இவை இத்தனையும் அவசியம் வேண்டும். பரம்பரை வியாதியாய் இருந்தால் நிதானமாய்த்தான் குணமாகும். ஆசனம், பிராணயாம, ஆகார நியமங்களால் குணப்படுத்தலாம். இவைகளெல்லாவற்றிற்கும் தன் மொழித் துதி பயனளிக்கும். மிக அபாயமான நிலைமையில் யோக வைத்தியர்கள் கிடைத்தால் அவர்கள் மூலம் பிராண சக்திப் பிரயோகம் பெறலாம்.

இதுவரை யோகாசன சிகிச்சையை நாடி வந்தவர்களில் பெரும்பாலோர் (நூற்றுக்குத் தொண்ணூறு பேர்கள் வரை) எனலாம். அவர்கள் அத்தனை பேரும் நோய் வந்து பல மருந்துகள் அருந்தி, ஊசிகள் போட்டு. எதனாலும் குணமாகவில்லை. கடைசியில் யோகாசன சிகிச்சையினாலாவது குணமாகுமா பார்க்கலாம் என்றே வருகிறார்கள். இந்த நிலைமையில் வரும்போது நோய் முற்றி விட்டிருக்கிறது. அதற்காகச் சாப்பிட்ட, பிரயோகித்த மருந்துகளினால் உடல் அவயவங்கள் சீர்கெட்டு மிக மோசமான நிலை அடைந்து விடுகின்றது. எனவே இந்த நிலைமையில் யோக சிகிச்சை அளிக்கப்படுகிறது. அது குணமாகச் சிறிது காலமாவது ஆகத்தான் செய்கிறது.

ஒரு குரு, சிஷ்யன் இருந்தார்கள். ஒருநாள் குரு, சிஷ்யனை அழைத்துக் கொண்டு காட்டுக்கு நடந்தார். சிஷ்யனை அப்பொழுதுதான் முளைத்துக் கிளம்பும் ஒரு சிறு செடியைக் காண்பித்து அதைப் பிடுங்கச் சொன்னார். சிஷ்யன் மிக இலேசாய்ப் பிடுங்கி விட்டான். பின், சிறிது வேரூன்றி, கிளைகள் விட்டு வளர்ந்த செடியைப் பிடுங்கச் சொன்னார். சிறிது பலத்தை உபயோகித்துப் பிடுங்க வேண்டியதாய் இருந்தது. பின் சற்றுப் பெரிதாக ஆள் உயரமான செடியைப் பிடுங்கச் சொன்னார். சிரமப்பட்டு உலுக்கி, ஆட்டிப் பல தடவை முயற்சி செய்து கஷ்டப்பட்டுப் பிடுங்குவதற்குள் சிஷ்யனுக்கு வியர்த்துக் கொட்டி விட்டது. பிறகு குரு, நன்கு வளர்ந்து 2, 3 வருஷமான மரத்தைக் காட்டிப் பிடுங்கச் சொன்னார். "சுவாமி இதைக் கையினால் அசைக்க முடியாது. இதோ கடப்பாறை, மண் வெட்டி கொண்டு வருகிறேன்" என்று சொல்லிக் கடப்பாரை, மண்வெட்டி கொண்டு வந்து அதன் சகாயத்தால் மிக்க சிரமப்பட்டு மரத்தைச் சாய்த்தான். அது வரை சிஷ்யன் குருவைப் பார்த்து ஒன்றும் கேட்கவில்லை. ஆனால் மனத்தில் ஏதோ குரு பயித்தியக்காரத்தனமாய் இப்படி ஏவுகின்றாரே என்று எண்ணி யிருப்பான். ஆனால் அவனோ மிகவும் களைத்து விட்டான். குரு சிஷ்யனை அன்பாய் அருகில் அழைத்தார். "அப்பனே நீ இதுவரை செய்தாயே அதுதான் வாழ்க்கையின் அநுபவம். சிறு முளையை லட்சியமாய்ப் பிடுங்கி எறிந்து விட்டாய். பிறகு பெரிதாக ஆகக் கஷ்டமும் அதிகமாயிற்று. அதைப் போலத்தான் உலகில் பல தீமைகள் மனித வாழ்க்கையில் புகும். அதை ஆரம்பத்திலேயே விரட்டி விட்டால் வாழ்க்கை நிம்மதியாய் நடத்தலாம். சிறிது அசட்டை பண்ணி அது என்ன செய்துவிடப் போகின்றது என்று இருந்தால் சிறிது சிறிதாக அது வேரை ஊன்றிக் கொண்டு தன் கிளைகளாகிய கெட்ட குணங்களை வளர்க்க ஆரம்பிக்கும். அப்பொழுதாவது அதைச் சிறிது சிரமப்பட்டு விரட்டிவிட வேண்டும். அப்படியும் செய்யாமல் இருந்தால் அது மரமாக வளர்ந்து உன் வாழ்க்கையையே மூடிக் கொள்ளும். பின் அதற்கு நீ பலியாக வேண்டியதுதான். எனவே எந்தத் தீமையையும் சிறு முளையிலேயே கிள்ளி எறிந்து விடுவது உத்தமம்" என்றாராம். இது ஒரு பழைய நீதிக் கதை.

அதைப் போலத்தான் வியாதிகளும். வியாதி என்று தெரிந்ததும் அல்லது உடலில் சிறிது அசௌகரியம் என்று தெரிந்ததும் யோகாசன சிகிச்சையை நாடினால் மிகச் சுலபமாய்ப் போக்கடித்து விடலாம். எவ்வளவுக் கெவ்வளவு நாள் பட்டுத் தாமதித்துச் சிகிச்சையை நாடுகின்றார்களோ, அதற்குத் தக குணமாகவும் நாளாகும்.

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டிகளுக்கு

### பிரதி மாதாந்திர விஜயம்

நோயாளிகளின் நன்மையை உத்தேசித்து 1953 அக்டோபர் மாதம் முதல் கீழ்க்கண்ட ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு மாதத்திலும் குறிப்பிட்ட தேதிகளில் கீழே குறிப்பிட்டுள்ள நேரங்களில் எமது டாக்டர் ஆலோசனை கூறுவதற்குத் தயாராக இருப்பார்.

○●○

ஆலோசனை நேரம் :

குறிப்பு :— முற்பகல் = 9 மணி முதல் 11 மணி வரை; பிற்பகல் = 3 மணி முதல் 5 மணி வரை
A. M. & P. M. = காலை 9 முதல் 11 மணி வரை, மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| கரூர் | 1 (முற்பகல்) | மெஸர்ஸ். சென்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் |
| சேலம் | 2 (A.M. & P.M.) | மெஸர்ஸ். சேலம் மெடிகல் சப்ளைஸ் & பார்மஸி லிட். |
| ஈரோடு | 3 (முற்பகல்) | மெஸர்ஸ். ஸ்ரீ கிருஷ்ணா & கோ., கெமிஸ்ட்ஸ் |
| திருப்பூர் | 3 (பிற்பகல்) | மெஸர்ஸ். ஆர். எஸ். வாசன் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| கோயமுத்தூர் | 4 (A.M. & P.M.) | மெஸர்ஸ். ஈஸ்வர் & கோ., கெமிஸ்ட்ஸ், ராஜா தெரு |
| பாலக்காடு | 5 (முற்பகல்) | மெஸர்ஸ். நாதம் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| பழனி | 6 (முற்பகல்) | ஸ்ரீ ஷண்முகானந்தா பவன், ரயில்வே ஸ்டேஷன் ரோடு |
| திண்டுக்கல் | 6 (பிற்பகல்) | மெஸர்ஸ். கி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ். ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மதுரை | 7 & 8 (A.M. & P.M.) | மெஸர்ஸ். டி.என்.சி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ், வடக்கு சித்திரை வீதி |
| கோவில்பட்டி | 9 (முற்பகல்) | மெஸர்ஸ். தனலக்ஷ்மி மெடிகல் மார்ட், கெமிஸ்ட்ஸ் & டிரக்கிஸ்ட்ஸ் |
| திருநெல்வேலி | 10 & 11 (A.M &P.M.) | தி சந்திர விலாஸ், போர்டிங் & லாட்ஜிங் திருநெல்வேலி ஜங்ஷன் |
| திருவனந்தபுரம் | 12 (A.M. & P.M.) | மெஸர்ஸ். எம். வி. கணபதி ஐயர் & சன்ஸ், அட்டகுளங்கரை |
| தென்காசி | 13 (முற்பகல்) | மெஸர்ஸ். தி மெடிகல் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| ராஜபாளையம் | 14 ,, | மெஸர்ஸ். வி. எஸ். திருப்பதி ராஜா மெடிகல் & ஜெனரல் மார்ட் |
| காரைக்குடி | 15 (A.M. & P.M) | மெஸர்ஸ். ஏ. வி. & சன்ஸ், டிராவலர்ஸ் ரூம்ஸ் |
| புதுக்கோட்டை | 16 (முற்பகல்) | வஸந்தா லாட்ஜ் |
| தஞ்சாவூர் | 17 (A.M. & P.M.) | ராஜா சத்திரம் |
| பட்டுக்கோட்டை | 18 (முற்பகல்) | ஸ்ரீ வி. ஜகதீச ஐயர், புத்தக வியாபாரம், பெரிய தெரு |
| திருத்துறைப்பூண்டி | 18 (பிற்பகல்) | ஸ்ரீ டி. வி. சந்திரசேகரம் பிள்ளை, மெடிகல் ஷாப் |
| மன்னார்குடி | 19 (A.M. & P.M ) | Ms. மீனு கிளினிக், காந்தி ரோடு |
| திருவாரூர் | 20 ,, | விசாரிக்குமிடம் : சுப்பையா மெடிகல் ஹால் அல்லது தி மெடிகல் எம்போரியம், விஜயபுரம் |
| நாகபட்டினம் | 21 (முற்பகல்) | மெஸர்ஸ். எஸ்.டி. சௌந்தரராஜ பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ் |

(தொடர்ச்சி எதிர் பக்கம் பார்க்க)

மற்றும் கடப்பாரை போன்ற மருந்துகளையும், ஆப்ரேஷனையும் உபயோகிக்க வேண்டியதுதான்.

சிலர் பல நாட்களாகப் பல வைத்தியங்கள் பார்த்திருப்பார்கள், பலவித மருந்துகளையும் பிரயோகித்திருப்பார்கள். எதனாலும் முடியாத போது ஆசன சிகிச்சையைப் பெற வருவார்கள். அவர்களுக்கு ஆசன சிகிச்சை அளித்து இரண்டு வாரங்கள் கூட ஆகி இருக்காது. சில ஆசனங்களை இன்னும் சரியாகக் கூடச் செய்ய வந்திருக்காது. இதற்குள் ஒன்றும் குணமில்லையே என்று நினைப்பார்கள். இவர்கள் அறியாமைக்கு என்ன சொல்லுவது! மருந்துகளை உபயோகிப்பதானால், மருந்தின் வேகத்தால் உடனே ஏதாவது சிறிது மாறுதலை உண்டாக்கலாம். இது அப்படியல்ல. தூண்டுகோலான மருந்துகள் இல்லாமல், இயற்கை முறையில் ஆசனம், பிராணயாம, ஆகார விதிகளால் குணமாக்க வேண்டும். தீவிர நீடித்த வியாதியானால் சற்று நீடித்துத்தான் பலன் காண முடியும். நோய் வந்து சில நாள், சில மாதங்களே ஆகி இருந்தால் அவர்களே ஆச்சரியப்படும் வண்ணம் மிக சீக்கிரத்தில் குணமாய்விடும். எனவே நோய் என்று தெரிந்ததும் எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரம் யோகாசன சிகிச்சையை நாடுகின்றார்களோ அவ்வளவுக்கும் நல்லது. நாளாக ஆகக் குணம் காண தாமதமாகும்.

ஆனால் யோக ஆசன சிகிச்சையானது சில வியாதிகளுக்கும், சில விபத்துகளுக்கும் உபயோகமாகாது. ஒருவருக்கு மலேரியா ஜுரம், அல்லது டைபாய்ட் ஜுரம் அல்லது வேறு எந்த ஜுரமாவது வந்து இருக்கிறதென்று வைத்துக் கொள்ளுவோம். 104, 105 டிகிரி வரை ஜுரம் காய்கின்றது. அல்லது அதற்கும் குறைவாக ஜுரம் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அந்தச் சமயத்தில் யோக ஆசன சிகிச்சை ஒன்றும் செய்ய முடியாது. எந்தவிதமான ஜுரம் என்று அறிந்து அதற்கான மருந்துகளைச் சாப்பிட வேண்டியதுதான். வேண்டுமானால் ஆகார நியமங்களை அனுசரிக்கலாம். துறி சிகிச்சை சிறிது பலனளிக்கும். இதெல்லாம் எந்தவித நோயாளிகளும் செய்யக் கூடியது. ஜுரம் வந்து போன பின் யோக ஆசன சிகிச்சை பெறலாம். மறுபடி அந்த ஜுரங்கள் வராது. ஜுரத்துக்காக உட்கொண்ட மருந்துகளின் பிரதிபலனால் உண்டாகும் வேறு வியாதிகளையும் வராமல் தடுக்கலாம்.

தலைவலி, வயிற்று வலி, காது வலி, கண் வலி முதலிய வலிகள் இருக்கும் போதும் ஆசனங்களைச் செய்யக் கூடாது. ஆனால் தலைவலி, வயிற்று வலி மற்றும் சில வலிகள் எப்பொழுதுமே இருந்து கொண்டிருக்காது. அவ்வப்போது சிறிது நேரம் இருந்து விட்டுப் போகும். அப்பேர்ப்பட்டவர்கள் வலிகள் இல்லாதபோது ஆசனங்களைச் செய்யலாம். சிலருக்குச் சதா தலைவலி இருக்கும். அப்படிப்பட்டவர்களுக்கு வேறு வழியே கிடையாது. அவர்கள் யோக ஆசன சிகிச்சையைக் கைக்கொள்ள வேண்டியதுதான். காது வலி, கண் வலி உள்ளவர்கள் ஆசனங்களைச் செய்யவே கூடாது. மருந்துகளால் அதைப் போக்கடித்துக் கொண்ட பின்தான் ஆசன சிகிச்சைக்கு உட்படலாம். இவைகளெல்லாவற்றிற்கும் ஆசனங்களை உடனே செய்யா விட்டாலும் மருந்து, பிராணயாம, ஆகார, துறி சிகிச்சையினால் குணப்படுத்தலாம்.



சென்னையில் தேசியச் சேமிப்பு நிர்வாக அதிகாரியாக உத்தியோகம் பார்த்து வந்த ஸ்ரீ எஸ். ஏ அய்யாசாமிச் செட்டியார் அவர்கள் 1948-ல் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். தமது உத்தியோக காலத்தில் அவர் அரும் பெரும் காரியங்களைச் சாதித்தார். ஸ்ரீ செட்டியாரை இந்த உத்தியோகத்துக்குச் சர்க்கார் நியமிப்பதற்கு முன்னால் ஆண்டு ஒன்றுக்கு ஒரு கோடி 89 லட்சம் ரூபாய் சிறு தொகை சேமிப்பு நிதியில் மக்கள் போட்டு வந்தார்கள். ஸ்ரீ அய்யாசாமி செட்டியார் உத்தியோகம் ஒப்புக் கொண்ட வருஷத்திலேயே பல்லோருடைய கூட்டுறவின் பேரில் செய்த தீவிரப் பிரசார வேலையின் காரணமாக மூன்று கோடி 53 லட்சம் ரூபாய் சிறுதொகை சேமிப்பு நிதியில் சேர்ந்தது. பல துறைகளில் உள்ளவர்களிடமும் தேசிய சேமிப்பு நிதிப் பிரசாரத்துக்கு அவசியமான கூட்டுறவை அவர் பெற்றார். கோகலே மண்டபத்தில் பிரசாரக் கூட்டங்களை நடத்தினார். பிரபல அரசியல் தலைவர்களுடன் கலை உலகில் புகழ் பெற்றவர்களையும் அப் பிரசாரக் கூட்டங்களுக்கு வந்து ஒத்துழைக்குமாறு செய்தார். இந்த முறையில் சினிமாத் துறையிலும் அவர் பல நண்பர்களை அடைந்தார். ஸ்ரீ அய்யாசாமிச் செட்டியாரின் இந்த உத்தியோக காலம் முடிவடைந்து ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டாக உயர் பதவி பெற்றுச் சென்னை நகரை விட்டுச் சென்றபோது சினிமாத்துறையைச் சேர்ந்த அவருடைய நண்பர்கள் பலர் அவருக்குச் சிறந்த முறையில் விமரிசையாகப் பிரிவுபசாரம் நடத்தினார்கள். அந்த உபசாரத்துக்கு வந்திருந்தவர்களில் சிலரை இப்படத்தில் காணலாம்.

---

காலரா, அம்மை, பிளேக் இம்மாதிரி அவசரத் தொத்து வியாதிகள் தாக்கின போதும் யோக ஆசன சிகிச்சை உபயோகப்படாது. மருந்துகளைக் கட்டாயம் உபயோகித்தே தீரவேண்டும். அம்மை வந்தால் மருந்து உபயோகப்படாது. ஆனால் இவை எல்லாவற்றிற்கும் ஆகார, துதி சிகிச்சை மிகவும் உதவியாக இருக்கும்.

மற்றும் நாம் எதிர்பாரா விபத்துக்கள் பல இருக்கின்றன. ஒரு பென்சிலைச் சீவுகின்றோம்; சற்று அஜாக்கிரதையினால் விரலுக்குப் பட்டு விடுகிறது. காய்கறி நறுக்கும்போது விரல்களுக்குப் பட்டு விடுகிறது. நடந்து போகிறோம்; ஒரு கல் தடுக்கிக் காலில் ரத்தம் ஒழுகுகிறது. அல்லது தெருவில் நடந்துபோகிறோம், ஒரு கார் வந்து மோதி விபத்து ஏற்படுகிறது. அல்லது மாடியில் இருந்து விழுந்து எலும்பு முறிந்து விடுகின்றது. இந்தச் சமயத்திலெல்லாம் யோகாசன சிகிச்சை ஒன்றும் செய்ய முடியாது. மருந்துகள்தான் குணம் செய்யும்.

கால் சிறுத்தும், முதுகு வளைந்தும், எலும்புகள் வளைந்தும், கண் குருடாகவும், வாய் ஊமையாகவும் மற்றும் பல கோளாறுகள் பிறக்கும்போதே ஏற்பட்டு விடுகின்றன. அப்பேர்ப்பட்ட நோய் உடையவர்களையும் யோகசிகிச்சையால் ஒன்றும் செய்துவிட முடியாது.

சிலருக்கு நடுவில் சில அவயவம் கெடுவதுண்டு. நன்றாய் இருந்த காது பிறகு கேளாமல் போய் விடும். நன்றாகப் பார்த்துக் கொண்டிருந்த கண் திடீரென்று பார்வை மழுங்கிவிடும். வாய் பேச வராது. கை தூக்க வராது. கால் எடுக்க வராது. மற்றும் பல இந்த மாதிரி நோயாளிகளை நூற்றுக்கு எழுபத்தி ஐந்து சதம் குணப்படுத்திவிடலாம். முக்கால் வாசிதான் குணமாகும் என்று அர்த்தமல்ல. நாலு பேர் வந்தால் மூன்று பேருக்கு நிச்சயம் குணம் கிடைக்கும். இதற்கு எவ்வளவு சீக்கிரமாக யோக சிகிச்சையை நாடுகின்றார்களோ அவ்வளவுக்கும் நல்லது. குணமாவது எல்லாம் மேற்படி குறைகள் வந்த விதமும் தாக்கின விதத்தையும் பொறுத்திருக்கின்றது. ஆனால் ஆசனங்கள் செய்ய முடியாத எல்லா நோயாளிகளுக்கும் ஆகாரம், பிராணாயாமம், துதி சிகிச்சையினால் ஒருவிதமாய்க் குணமாக்கலாம். ஆனால் மருந்தும் உபயோகிக்க வேண்டும். பைத்தியக்காரத் தனமாய் எல்லாமே ஆசனங்களால் போய்விடும் என்று எண்ணக் கூடாது. இது நோய்ன் கூறுகளை அனுபவ பூர்வமாய் அறியாதவர்கள் சொல்லும் வாதமாகும்.

சிறு குழந்தைகளுக்கு இ மாதிரி பல நோய்கள் வரும். அவைகளுக் கெல்லாம் ஆசனம் செய்விக்க முடியுமா! இவைகளுக் கெல்லாம் பாரபட்சமின்றி, பட்டவர்த்தனமாய், வீண் கௌரவம், வீண் பிடிவாதமின்றி உள்ளது உள்ளபடி ஒப்புக் கொள்ள வேண்டியதுதான். (தொடரும்)

# வட்ட மேஜை

## படிப்பும் விளையாட்டும்

இன்று நான் மூன்று வித்யா பட்டங்கள் பெற்ற ஒரு கல்லூரிப் பேராசிரியன்தான். ஆனால் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் நான் ஒரு ஆரம்பப் பாடசாலை ஆசிரியன். என்னுடைய குறைந்த கால வாழ்க்கையில் என் மனக் கருத்துக்கள் பல மாறுதல்கள் அடைந்திருக்கின்றன. ஆனால் ஒரு கருத்து மட்டும் மாறவில்லை.

அது இதுதான் :—வாசிப்பு, எழுத்து, கணக்கு, பொது அறிவு ஆகிய நான்கு பாடங்களுக்கும் இரண்டு அல்லது மூன்று மணி நேரப் படிப்புக்கு மேல் பிள்ளைகள் மனத்தில் ஒன்றும் ஏற்றமுடியாது. அதற்கு மேல் பிள்ளைகள் பள்ளிக்கூடத்தில் இருப்பதெல்லாம் வீண். ஆகையால் பாதி நேரம் ஏட்டுப் படிப்புக்குப் போக, அடுத்த பாதி நேரம் விளையாட்டாக இருக்க வேண்டும். கோலி, சடுகுடு விளையாட்டு மட்டும் அல்ல; விளையாட்டுப் போல பிள்ளைகளுக்கு இன்பம் கொடுப்பதாகிய தோட்டம் போடுதல், கோழி, புறா, முயல் முதலியன வளர்த்தல், ஆறு, குளங்கள், ஸ்தலங்களைச் சுற்றிப் பார்த்தல், ஓலை வேலை, பிரம்பு வேலை, நூல் வேலை, நெசவு வேலை முதலிய கைத் தொழில்கள் செய்தல்—இவைகளால் பிள்ளைகளுடைய கண்களும், கைகளும் மற்றப் பொறிகளும் ஊன்றி நோக்குதல், கற்பனை செய்தல், நிர்மாணித்தல் முதலிய மனத் தத்துவங்களும் பயிற்சி யடைகின்றன.

உலகம் பள்ளிக்கூட மல்ல. அது சமூக வாழ்க்கைக் குரிய அரங்கு. ஆகையால் பிள்ளைகளை அறிவினாலும் அனுபவத்தினாலும், உழைப்பினாலும், குணத்தினாலும் வாழ்க்கைக்கு லாயக்குள்ளவராக்கும்படி கல்விமுறைகளைக் கையாள வேண்டும். கற்றவர்களைக் கல்லாதவர்களை விட எல்லா அம்சத்திலும் தேர்ந்தவர்களாக்கத் தக்க முறையே கல்வி முறைகளில் சிறந்த முறை.

நம் தமிழ் நாட்டில் உயர்ந்த கல்வி முறையைச் செயலாக்க, கனம் ராஜாஜி அவர்கள் அளித்துள்ள புதிய கல்வித் திட்டத்தால் தமிழ் நாடெங்குமுள்ள எண்பது லட்சம் பிள்ளைகளும் 'கல்வியும் கைத் தொழிலும்' அல்லது 'படிப்பும் விளையாட்டு'மாகிய உத்தம வித்தை கிடைத்து உயரப் போகிறார்கள்.

மதுரை
22-8-53

ஆ. ஜெயரத்னம் எம். ஏ.

## புதுடில்லியில் தமிழ் விழா

மேற்கண்ட தலைப்பின் கீழ் சென்ற இரண்டு வார 'கல்கி' இதழ்களில் பிரசுரமான விழாவின் கட்டுரையைக் குறித்துப் பெருமைப்படும் டில்லித் தமிழர்களில் நானும் ஒருவன். ஆயினும் தங்கள் "விசேஷ நிருபர்" சில முக்கியமான செய்திகளைப் பற்றி எழுத விட்டுவிட்டார்.

இடைவிடாமல், தங்கள் அலுவல்களை மறந்து, வேலைசெய்யும் காரியாலயங்களை மறந்து, கருமமே கண்ணாகி, வேலைசெய்து தங்கள் கடமைகளைச் செய்தவர்கள் சிலர். அவர்களைப் பற்றிக் குறிப்பிடாதது மிகவும் வருத்தத்தை அளிக்கிறது.

அவகாசமே கொடுக்காமல் ஏற்பாடு செய்யப்பட்ட இந்த விழாவைச் சரிவர நடத்தவேண்டுமே, முக்கியமாக "பொருள்" அல்லவா வேண்டும், மழை வேறு கொட்டிக் கொண்டிருக்கிறதே என்ற கவலைகள் பலருக்கும் இருந்தது. முக்கியமாக இந்த ஊரில் நிதிவசூல் செய்யும் திருப்பணியில் அக்கிரஸ்தானம் வகிக்கும், விழா உபதலைவர் ஸ்ரீ கே. ராமமூர்த்தி எவ்வளவு சிரமத்துக்கு உள்ளானார் என்பது யாவரும் அறிந்ததே. இவரை அல்லவோ பாராட்ட வேண்டும்! முதல் நாள் இரவு 12 மணி முதல் காலை 5 மணி வரையில் சீகல் தியேட்டரை ஒழுங்கு செய்ய வேலை செய்தவர்களை உற்சாகம் அளித்துவந்தார். அடுத்தபடியாக டில்லித் தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த பாலு (எம். பாலசுப்பிரமணியன்) ஜி. சங்கரநாராயணன், மதராஸி கல்விக் கழகப் பொக்கிஷதார் என். ராமமூர்த்தி, ஏ. வி. ஓய். நாராயணன், பி. எம். சுந்தரம், ஆர். வைத்தியநாதன், ரகுநாதன், ஆர். எஸ். வெங்கடராமன் இவர்கள் எல்லோரும் எந்த வேலையிலும் ஈடுபட்டு விழாவைச் சிறப்பிக்கச் செய்தார்கள். மதராஸி கல்விக் கழகத்தார், தங்கள் பள்ளிக்கூடக் கட்டிடம் பல்கள் முதலியவற்றைத் தமிழ் விழாவுக்காகக் கொடுத்து உதவி செய்தார்கள். இதன் காரியதரிசி டி. ராமையா, விழாவின் காரியதரிசியாக அமைந்ததே ஒரு பாக்கியம். பள்ளியின் பிரின்ஸிபால் கே. சூரியநாராயணய்யர் தம் உடல் நலத்தையும் கவனிக்காமல் ஈடுபட்டார். இவர்கள் எல்லோருக்கும் நன்றி கூறிப் பாராட்ட வேண்டும்.

புதுடில்லி
14—9—53

என். ராமமூர்த்தி,
நிர்வாகக் கமிட்டி அங்கத்தினன்.

## ஒரு யோசனை!

செப்டம்பர் ஆறாம் தேதி 'கல்கி' இதழில் வெளிவந்துள்ள "சுதந்திர இந்தியாவில் என் அனுபவங்கள்" என்ற கட்டுரையைப் படிக்கும் ஒவ்வொரு சர்க்கார் ஊழியரும் தான் செய்து வரும் கடமையில் இழுக்கு இருக்குமேயானால் அதைக் கைவிட்டே விடுவர்.

எனினும் ஸ்ரீ கே. நடராஜன் அவர்கள் கூறியுள்ளபடி ஒரு லைசென்ஸ் வாங்குவதற்கு இவ்வளவு கஷ்டங்கள் ஏற்படும்-அதுபோன்ற ஒவ்வொரு விஷயங்களிலும் கீழ் உத்தியோகஸ்தர்களையே நாம் குறைகூற வேண்டியிருக்கிறது. அந்த உத்தியோகஸ்தர்கள் தங்களின் சுயநலம் கருதி அந்தந்த விஷயங்களின் உண்மையான நிலைமையைத் தெரிவிக்காமல் குருட்டுத்தனமாக அதைத் திரித்து மேலதிகாரிகளுக்கு விளக்குகிறார்கள். அதன் முடிவு கடைசியில், சர்க்கார் உயர் அதிகாரியோடு கூட முடியாமல் மந்திரியைப் பேட்டி காணும் நிலைமைக்கு வந்து விடுகிறது.

"பியூனையும் குமாஸ்தாவையும் திருப்தி செய்யாமல் சாதாரண காரியங்களைக் கூட நிறைவேற்றிக் கொள்ள முடிவதில்லை" என்பதைச் சிறு குழந்தை கூட மறுக்க முடியாத உண்மை. ஆனால் அதைத் தடுக்க வழிகோலும் கடமை மக்களிடம்தான் புதைந்து கிடக்கிறது. அதனால் இது போன்ற லஞ்ச ஊழல் காரியங்களை—ஒவ்வொரு நபரையும் காட்டிக் கொடுப்பவர்களுக்கு வசதி அளிக்கும் பொருட்டு ஒரு நிதியின் மூலம் இவர்களுக்கு உதவி புரிந்தால் அக்காரியம் வெற்றி முரசு கொட்டும் என்பதில் ஐயமில்லை. இந்நிதி திரட்டவும் லஞ்ச ஊழல் காரியங்களைக் காட்டிக் கொடுக்கும் தொண்டர்களாக ஜனங்களே சிலர் சேர்ந்தோ அல்லது ஒவ்வொரு கிராமத்துக்கும் நகரத்துக்கும் உள்ள தங்களது சங்கத்திற்கு ஏவிட்டோ காரியங்களைச் சாதிக்கலாம்.

சென்னை
14-9-53

ஆர். சின்னகிருஷ்ணன்

# டயர் சிலவு குறைய சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் உதவும்

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் டி. வி. எஸ். ஸ்தாபனத்தின் கிளை. 1913ஆம் வருடம் ஸ்தாபிக்கப் பட்டது. பத்து வருடங் களுக்கு முன், யுத்த கால ஏற்பாட்டில் டயர் கட்டுப்பாடு நிலவியது. டி. வி. எஸ். பழைய டயர் புதுப்பிக்கவும், பழுதான டயர் சீர்படுத்தவும், டயர் பஞ்சத்தை சமாளிக்கவும் உகந்த இயந்திர தொழில் ஸ்தாபனத்தைப் பணியாற்றும் முறை யில் நிருவியது. இந்நாளில் சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பழைய டயர்களை, நம் ரஸ்தாக்களுக்கு உகந்த முறையிலும், சீராக நீடித்த உழைப்பிற்கும் புதுப்பிக் கின்றது. பழுதான டயர்களை இயந்திர முறையில் செப்பனிட்டு உருவாக்குகிறது.






## சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

புதுக்கோட்டை

டி. வி. எஸ். குரூப்பைச் சேர்ந்த ஸ்தாபனம்




அப்போது நான் ரகுராமன் பட்டணத்தில் ராஜா உயர்நிலைப் பெண்கள் பாடசாலையில் வாத்தியாரம்மானாக இருந்தேன். எனக்கு 'நல்ல டீச்சர்' என்ற பெயர் பொதுவாக மாணவிகளிடையே யுண்டு. ஏனெனில் நான் பாடங்களைப் புரியும்படி சொல்லிக் கொடுத்து விடுவேனும்; கேள்விகள் கேட்டுத் தொந்தரவு செய்ய மாட்டேனும்—மாணவிகள் சொல்லிக் கொள்வார்கள். நல்ல டீச்சர் என்று பெயர் எடுத்து விட்டால், டியூஷன் விராக்கி பற்றியும் சொல்லத் தேவையில்லை. பணக்கார வீட்டுப் பெண்கள் எல்லாம் என்னையே தங்கள் டியூஷன் டீச்சராக வைத்துக் கொள்ள ஆசைப்பட்டனர். ஆனால் எல்லா மாணவிகளின் விருப்பத்தையும் பூர்த்தி செய்ய முடியுமா! மேலும் பள்ளிக்கூட விதிகள் வேறு, ஒரு டீச்சர் இரண்டு டியூஷன்களுக்கு மேல் வைத்துக் கொள்ளக் கூடாது என்று பயமுறுத்தின. ஆகவே நல்ல வருவாய் உள்ள டியூஷனாகப் பார்த்து இரண்டு வைத்துக் கொண்டேன்.

ஜானகி வகுப்பிலேயே மிகவும் கூர்மையான பெண். ஒரு பாடத்தை ஒரு தடவை சொல்லிக் கொடுத்தால் போதும் கிரகித்துக் கொள்வாள். இரண்டாம் முறை சொல்லிக் கொடுக்க வேண்டும் என்ற அவசியமிராது. ஆனால் அதிலிருந்து அவளுக்கு ஏற்படும் ருசிகரமான சந்தேகங்களை நிவர்த்தி செய்வதில் தனி இன்பம் எனக்கு ஏற்படுவதுண்டு. இப்படிப்பட்ட பெண்ணுக்கு டியூஷன் சொல்லித் தரவேண்டிய அவசியமே இல்லை. ஆனால் அவளுடைய தகப்பனார் ஊரிலேயே பெரிய மிராசுதார். செல்வமும் செல்வாக்கும் உள்ளவர். தமது ஒரே பெண்ணான ஜானகி ரொம்பப் படித்துக் கெட்டிக்காரியாக விளங்க வேண்டும் என்ற ஆசை. அந்த ஆசையில் அவளுக்குப் பள்ளிக்கூடத்தில் சொல்லிக் கொடுப்பது போதாதென்று வீட்டிலும் சொல்லிக் கொடுக்க என்னை நியமித்தார்கள்.

ஆறும் வகுப்பில் ஜானகி படிக்கும்போது நியமிக்கப்பட்ட நான், எட்டாம் வகுப்புவரை நானே அவள் டியூஷன் டீச்சராக இருந்து வந்தேன். இரண்டரை வருடங்கள் தொடர்ந்து அவளுக்கு டீச்சராக இருந்தமையால், 'டீச்சர்' என்ற எண்ணம் ஓரளவு குறைந்து, நான் அந்தக் குடும்பத்தில் ஒருத்தியாகவும், ஜானகிக்கு உற்ற துணைவியாகவும் கருதப்படலானேன்!

ஒருநாள், ஜானகிக்குத் தமிழ்ச் செய்யுள் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தேன். தமிழ் மூதாட்டி ஔவைப் பிராட்டியின் பாட்டு ஒன்று:

ஈதலறம் தீவினைவிட் டீட்டல்பொருள் எஞ்ஞான்றும்
காதலிருவர் கருத்தொருமித்து—ஆதரவு
பட்டதே இன்பம்: பரனை நினைந்(து) இம் மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

இந்த பாட்டுக்குப் பொருள் நான் சொல்லிக் கொடுக்க வேண்டிய அவசியமே இல்லை. எனினும் வீட்டுக்கு வந்து விட்டால், மற்றுமொரு முறை என் மனச் சாட்சியைத் திருப்தி செய்து கொள்ள அவளுக்குச் சொல்லிக் கொடுத்தேன். ஆயினும் நான் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கும் போது, கேட்பதாக ஜானகி பாவனையாகிலும் செய்ய வேண்டாமா! அவள் என் வார்த்தைகளில் ஒன்றைக்கூடக் காதில் வாங்கிக் கொள்ளாமல் எங்கோ, ஏதோ யோசித்த வண்ணமிருந்தாள். எனக்குக் கொஞ்சம் கஷ்டமாக இருந்தது. பணக்கார வீட்டுப் பெண். கடிந்து கொள்ளவும் முடியவில்லை. எனினும் அவள் கவனத்தை எப்படித் திருப்பலாம் என்று யோசித்துக் கொண்டிருந்த போது, "டீச்சர், நீங்கள் எப்பொழுதாகிலும் காதலித்திருக்கிறீர்களா!" என்று கேட்டாள்.

அந்தக் கேள்வி, என் சிந்தையைத் திகைக்க வைத்து விட்டது. அதில் ஜானகியின் உண்மை நிலையை மறந்தேன். என் சொந்த உணர்ச்சி மேலோங்கி விட்டது. "இதெல்லாம் என்ன அசட்டுத்தனமான கேள்வி, ஜானகி! சரி, இன்றையப் பாடம் இத்துடன் போதும்!" என்று சொல்லிவிட்டு எழுந்து போய் விட்டேன்.

'ஜானகி, இதென்ன இப்படி அதிகப் பிரசங்கித்தனமான கேள்வி கேட்டாள்! என் வாழ்க்கையில் காதல் இருந்ததா என்று தெரிந்து கொள்வதில் இவளுக்கு என்ன அக்கறை! நான் காதலித்திருந்தால் என்ன! காதலிக்காமல் எக்கேடு கெட்டுப் போயிருந்தால்தான் இவளுக்கு என்ன வந்தது! பள்ளிக்கூடப் பாடம் சொல்லிக் கொடுக்க வந்தவளிடம் இதெல்லாம் என்ன கேள்வி!' இப்படி மனத்தில் கோபப் பொறி பறக்கும் கேள்விகள் ஆயிரம் எழுந்தன, நான் வீடு சென்றடையும் வரையில்.

வீட்டுக்குப் போய்க் குளித்துவிட்டு, சாப்பாட்டை முடித்துக் கொண்டு பள்ளிக்கூடம் சென்றபோது, கோபம் பெரிதும் தணிந்து விட்டது. எப்பொழுதும் போல் பள்ளிக்கூட வேலைகளில் மூழ்கி விட்டேன். அன்று கடைசி 'பீரியட்'டில் எனக்கு ஜானகியின் வகுப்புக்குப் போகவேண்டும். அந்த வகுப்புக்குச் சென்றபோது தான் அன்று முழுதும் ஜானகி பள்ளிக் கூடத்துக்கு வரவில்லை என்பதை யறிந்தேன். உடனே என் மனசு இளகி விட்டது. பள்ளிக்கூடத்துக்கு வந்தால் என்னைப் பார்க்க வேண்டி யிருக்குமே என்று சங்கோசமோ, பயமோ பட்டுக்கொண்டு வராமலிருந்திருக்கிறாள் என்பதை ஊகித்தேன். 'இப்படி எத்தனை நாள் இருக்க முடியும்! பேதைப் பெண்ணே!' என்று நினைத்தேன். என் மனத்தில் அவளிடம் இரக்கமும் அனுதாபமும் பெருக்கெடுத்தது. அன்று மாலை வீட்டுக்குப் போகும் போது, மனத்தில் எழுந்த எண்ணங்கள் முற்றும் மாறுபட்டிருந்தன.

'பாவம், ஜானகி! அவளை அனாவசியமாகக் கடிந்து கொண்டு விட்டேன். வயசுப் பெண் அல்லவா! அவள் மனத்தில் எத்தனையோ எண்ணங்கள், காதல் கீதல் என்று தோன்றுவது இயல்பே யல்லவா! கொஞ்சங்கூட முன் யோசனை யின்றிக் கோபித்துக் கொண்டு விட்டேன். மேலும், இத்தனை நாள் அவளுடன் நெருங்கிப் பழகியதன் பயனாக, அவள் என் வாழ்க்கை வரலாற்றை அறிய விரும்பினால், அதை நான் சொல்லிவிட்டால் என்ன எனக்குக் குறைந்து போகும்! அப்படி என்ன ரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டிய வாழ்க்கையை நடத்தி விட்டேன், கேட்டால் சொல்லித் தொலைப்பதற்கு இல்லாமல்! சுத்த மோசம் நான்! பிஞ்சு உள்ளத்தை நோகச் செய்து விட்டேனே!'

இப்படிப்பட்ட எண்ணங்களே அன்றிரவு முழுதும் என் உள்ளத்தில் எழும்பி வெகு நேரம் வரையில் தூக்கம் வர வொட்டாமல் செய்தன.

தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு பார்த்தால், மணி ரொம்பவும் ஆகியிருந்தது. அவசரம் அவசரமாகப் பல்லைத் தேய்த்து, காப்பி சாப்பிட்டு விட்டு, உடையை மாற்றிக் கொண்டு, ஜானகியின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன். ஜானகி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

"என்ன ஜானகி!" என்றேன் நான் எப்பொழுதும் போல்.

"டீச்சர், நேற்று நான் உங்களைக் கேட்டதற்காக என்னை மன்னித்து விடுங்கள்!" என்று தட்டுத் தடுமாறிக் கூறினாள். அவள் கண்களி லிருந்து பொல பொல வென்று கண்ணீர் வந்து விட்டது.

என் மனசு ரொம்ப தூரம் இரங்கி விட்டது.

"அடி அசட்டுப் பெண்ணே! இதற்காக அழுவார்களா! நீ கேட்டது ஒன்றும் தப்பில்லை. பார்க்கப் போனால் என்மேல்தான் தப்பும் தவறும். நான் உன்னைக் கடிந்து கொண்டிருக்கக் கூடாது. போய் விட்டுப் போகிறது போ! நேற்றைய சமாசாரம் நேற்றோடு போய் விட்டது!" என்று ஏதோ சமாதானப் படுத்தினேன், ஜானகியை.

அவள் ஓரளவு ஆறுதலடைந்தாள்.

இந்தச் சம்பவத்திற்குப் பின்னர் நானும் ஜானகியும் உள்ளத்தால் இன்னும் கொஞ்சம் அதிகமாகவே நெருங்கி வரலானோம்.

*

பத்து நாட்கள் சென்றன.

ஜானகி என்றைக்கு மில்லாத உற்சாகத்துடன் காணப்பட்டாள். கண்களில் ஒரு புது ஒளி வீசியது. எதைச் செய்தாலும், காற்றில் மிதந்து சென்று செய்வது போல் அவள் செயலில் தனி லாகவமும் துறுதுறுப்பும் இருந்தன! எல்லாவற்றையும் விட அவள் நெஞ்சில் ஏதோ ஒரு வஸ்து அடைபட்டுக் கிடக்க முடியாமல், என்னிடம் துள்ளி வரப் படாத பாடுபட்டது. இதையெல்லாம் நான் கண்டேன். "இன்றைக்கு என்ன விசேஷம், ஜானகி!" என்று நான் கேட்க வேண்டியதுதான் தாமதம். உடனே உள்ளத்தை



விண்டு என் முன் வைத்து விடுபவள் போல் காணப்பட்டாள். ஆனல் நான் கேட்கவில்லை. பாடம் நடத்திக் கொண்டிருந்தேன். ஆனல் எத்தனை நாழிகைதான், 'ஜானகி கேட்டால் கேட்கட்டும்; கேட்காவிட்டால் போகட்டும்' என்று நிறை உணர்ச்சியில் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்க முடியும்! கடைசியில் கேட்டே விட்டேன். "என்ன ஜானகி! நான் சொல்லிக் கொடுப்பதைக் கேட்டுக் கொண்டு வருகிறுயல்லவா!" என்றேன்.

"சொல்வது காதில் விழுகிறது. ஆனல் மனதில் படவில்லை. மனதில் வேறு ஒரு விஷயம் நிரம்பியிருக்கு, டீச்சர்" என்ருள்.

"அது என்ன!" என்று புஸ்தகத்தை மூடி வைத்துவிட்டு உற்சாகமாகக் கேட்டேன்.

"ஒன்றுமில்லை; அதெல்லாம் உங்களண்டை சொல்லக் கூடியதல்ல, டீச்சர்" என்ருள்.

"பரவாயில்லை, சும்மா சொல்" என்றேன்.

"அன்றைக்கு ஏதோ தெரியாத்தனமாக உங்களண்டை ஒரு கேள்வி கேட்டு வைக்க நீங்கள் கோபித்துக் கொண்டு விட்டீர்கள். மறுபடியும் அதே தவறை நான் இன்றைக்கும் செய்ய மாட்டேன்" என்ருள் ஜானகி.

"சீ,சீ, அசடே! உன்னை அன்றைக்குக் கோபித்துக் கொண்டதற்கு நான் எவ்வளவு வருத்தப்பட்டேன் தெரியுமா! அன்றைக்குக் கூடச் சொன்னேனே. தப்பு உன் மேல் இல்லை, என்மேல் தான் என்று. இன்னுமா என் மேல் அவநம்பிக்கை!" என்றேன் உற்சாகமூட்டும் வகையில்.

"உங்களிடம் அவநம்பிக்கை யெல்லாம் ஒன்றும் கிடையாது டீச்சர்."

"பின் ஏன் உன் மனதில் உள்ளதைச் சொல்லுவதற்கு தயங்குகிறுய்...!" என்று கேட்டேன்.

"வெட்கமாக விருக்கிறது, டீச்சர்" என்று சொல்லித் தலையைக் குனிந்து கொண்டு கைவிரல்களால் தரையில் ஏதோ விஷமம் செய்யலானுள்.



"என்னிடம் உனக்கு என்ன வெட்கம்! எது வேண்டுமானுலும் சொல்லலாம். நீ சந்தோஷப்பட்டாயானுல், நானும் சந்தோஷப் படுவேன். உன் வருத்தம் என் வருத்தமும்தான். பார்க்கப் போனுல், நீயும் நானும் நெருங்கிப் பழகிய அளவு வேறு யாரும் உன் வீட்டிலேகூடப் பழகியிருக்க மாட்டார்கள். ஆகவே, சொல். ஏதாகிலும் காதல் விஷயமா!" என்று கேட்டு வைத்தேன்.

"ஆமாம்" என்பதுபோல் தலை யசைத்தாள். அப்பொழுது அவள் இதழ்களில் குறு நகையும், அழகிய விழிகளில் புத்தொளியும் தோன்றின.

"யார் ஜானகி எனக்கு விவரமாகச் சொல்! உன்னூரிலேயே இருக்கிறுனு உன் காதலன்! அல்லது வீட்டுக்கு வந்திருக்கிறுனு!"

"அதெல்லாம் இல்லை டீச்சர். போன கோடை விடுமுறைக்கு நாங்கள் எங்கள் அத்தை வீட்டுக்கு போயிருந்தோம், அல்லவா! அங்கே என் அத்தை பிள்ளை அத்தான் இருக்கான்—இருக்கார். அவருக்கும் எனக்கும்......" என்று ஆரம்பித்தாள்.

★

பின் எத்தனையோ தடவைகளில் சுந்தரமும் ஜானகியும் சகஜமாகப் பேசிப் பழகியிருக்கிறுர்கள்; விளையாடியிருக்கிறுர்கள்; ஏன், ஒவ்வொரு சமயம் ஜானகி தன் அத்தானை அடிக்கக்கூட அடித்திருக்கிருள். ஆனல் அதெல்லாம் பழங் கதை.

இந்தத் தடவை நிலைமையே வேறு. சுந்தரம் நின்ற இடத்தில் அவள் நிற்க வெட்கப்பட்டாள். சுந்தரத்தைத் தலை நிமிர்ந்து பார்க்க நாணினுள்! பின்னர் பேசுவது என்பது ஏது!

சுந்தரம் இண்டர் பரீட்சைக்கு எழுதியிருந்தான். அவனுக்கு விடுமுறை நாட்களாதலால், நேரத்தைப் போக்கத் தமிழ் நாவல்களையும், ஆங்கில நாவல்களையும், நண்பர்களிடமிருந்து இரவல் வாங்கி வந்து படித்து வந்தான். ஆகவே, அவன் மேஜையில் எப்பொழுதும் நான்கைந்து தமிழ்ப் புத்தகங்களும் ஆங்கிலப் புத்தகங்களும் இருக்கும்.

ஒருநாள் மாலை, சுந்தரம் வெளியே போயிருந்த போது, ஜானகி அவன் அறைக்குள் ஏதோ காரியமாக நுழைந்தாள். அங்கே பளபளவென்று மின்னும் வர்ணச் சித்திர அட்டை போட்ட புஸ்தகத்தைப் பார்த்ததும், அவளுக்குப் படிக்க வேண்டும் என்ற அவா உந்தித் தள்ளியது. உடனே அந்தப் புஸ்தகத்தை எடுத்துப் பார்த்தாள். உள்ளே திறந்து ஒரு 'பாரா'வைப் படித்தாள். மனது அதில் லயித்து விட்டது. படித்துக் கொண்டே இருந்தாள்; நேரம் போனதே தெரியவில்லை. வெளியே போன சுந்தரம் திரும்பி வந்ததையும் உணரவில்லை.

"என்ன ஜானகி! கதை ரொம்ப சுவாரஸ்யமாக இருக்கிறதோ!" என்று கேட்டான் சுந்தரம்.

அந்தக் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டாள். அடுத்த கணம் அவளுக்கு நிலைகொள்ளவில்லை. அந்த இடத்தை விட்டு ஓடுவதற்கு முயன்ருள்.

"இதோ பார், ஜானகி! பாதிப் புஸ்தகத்தைப் படித்து விட்டு அப்



இராணிப் பேட்டை தேசபக்தர் ஸ்ரீ கே. ஆர். கலியாணராமன் அவர்களின் புதல்வி சௌ. பாரதிக்கும் பெங்களூர் ஸ்ரீ வெங்கடேசய்யரின் புதல்வர் சிரஞ்சீவி சுப்பிரமண்யத்துக்கும் செப்டம்பர் 10உ சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. சென்னையிலிருந்து ஸ்ரீ பெருமாள்சாமி செட்டியார், டாக்டர் யூ. கிருஷ்ணராவ் முதலிய பிரமுகர்களும் பல நண்பர்களும் விஜயம் செய்திருந்தார்கள். ராஷ்டிரபதி ராஜேந்திர பிரஸாத், ராஜாஜி முதலிய மா பெருந் தலைவர்களிடமிருந்தெல்லாம் ஆசிச் செய்திகள் வந்திருந்தன. வாழ்க, மணமக்கள்!

படியே போட்டு விட்டுப்போகிறாயே! இந்தா புஸ்தகத்தை எடுத்துக் கொண்டு போய், முழுதும் படித்து முடித்து விட்டுத்தான் என்னிடம் கொண்டு வந்து கொடேன். என்ன அவசரம்!"

ஜானகி அந்தப் புஸ்தகத்தை எடுத்துக் கொண்டு தன்னுடைய அறைக்குப் போனாள்.

அன்றிரவுக்குள் அந்தக் கதையைப் படித்து முடித்து விட்டாள்.

கதை முடிந்தான பிறகு அவளுக்கு அந்தப் புஸ்தகத்தைச் சுந்தரத்தினிடம் எப்படித் திருப்பித் தருவது என்பது பெரும் பிரச்னையாகி விட்டது.

அத்தானை நேரில் பார்த்துக் கொடுத்து விட்டு வருவதா! சே, அதெப்படி முடியும்!" என்று எண்ணினாள். 'அத்தானும் நானும் நெருங்கிப் பழகியவர்கள்தானே. இப்போது எங்கிருந்து இந்த வெட்கம் முளைத்தது' என்று தன்னைத் தானே கடிந்து கொண்டாள். கடைசியில் அத்தான் இல்லாத சமயமாகப் பார்த்துப் புஸ்தகத்தை அவர் மேஜைமேல் வைத்து விடுவதுதான் சரியான யோசனை என்று முடிவு செய்தாள். அந்தப்படியே, மறுநாள் மாலை, சுந்தரம் வீட்டில் இல்லை என்பதை அறிந்து கொண்ட பிறகு அவன் அறைக்குள் நுழைந்தாள். அங்கே மேஜை மீது மற்றொரு புஸ்தகம் கண்ணைக் கவரும் வனப்புடன் மிளிர்ந்தது. அதைப் பார்த்த ஜானகி, தான் கொண்டு வந்த புஸ்தகத்தை மேஜைமீது வைக்காமல், இடது கையில் வைத்துக் கொண்டு வலது கையினால் மேஜை மீதிருந்த புஸ்தகத்தைப் புரட்டத் தொடங்கினாள். அப்போதுதான் ஏதோ காரியமாக மிக அவசரமாக வந்த சுந்தரம், ஜானகி நிற்பதைக் கண்டவுடன் சற்றுத் தயங்கினான். பின்னால் காலடிச் சத்தம் கேட்கவே ஜானகி திரும்பிப் பார்த்தாள். சுந்தரத்தைப் பார்த்ததும், பரபரப்படைந்து அவ்விடத்தை விட்டு ஓட யத்தனித்தாள்.

அந்தச் சமயம் "எங்கே வந்தாய், ஜானகி!" என்று கேட்டான் சுந்தரம்.

"நேற்று கொண்டு போன புஸ்தகத்தை வைத்து விட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்......" என்று சொன்னாள் ஜானகி.

"அதற்குள்ளாக படித்தாகி விட்டதோ! அட, தேவலையே! வேறு எதாகிலும் புஸ்தகம் வேண்டும் என்றாலும் கொண்டு போ!" என்றான் சுந்தரம் அன்புடன்.

"வேண்டாம்" என்று கூறினாள் ஜானகி. ஆனால் அவள் குரலில், அவள் முகபாவனையில், "வேண்டும்" என்ற பதில் நன்கு தொனித்தது.

ஆகவே, "ஏன் ஜானகி, உனக்கு என்னிடம் இவ்வளவு வெட்கம்! உனக்கு என்னைத் தெரியாதா! தைரியமாய்க் கேட்டு வாங்கிக் கொள்ளேன்" என்றான்.

ஜானகி பதில் பேசாமல் சிலைபோல் நின்றாள்.

"என்ன ஜானகி, பேசக்கூட மாட்டாயா!" என்றான் சுந்தரம்.

மறுபடியும் தலைகுனிந்தவாறே நின்றாள் ஜானகி.

சுந்தரம் ஜானகியினருகில் நெருங்கி வந்தான். "என்ன பேச மாட்டாயா, ஜானகி!" என்று சொல்லிக் கொண்டே அவளுடைய தலையை நிமிர்த்தினான்.

சுந்தரம் பிரமித்துப் போய் விட்டான். "இது என்ன ஜானகி! இது என்ன! ஏன்!" என்று நூறு கேள்விகள் அடுக்கி விட்டான். அதற்குள் ஆயிரம் கண்ணீர்த் துளிகள் ஜானகியின் கண்களிலிருந்து பூமியில் சிந்தி விட்டன!

ஜானகி அவன் பிடிப்பிலிருந்து விடுபட்டுத் தன் பாவாடைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

"ஜானகி, ஏன் அழுகிறாய்! நான் என்ன செய்தேன்!" என்று கேட்டான்.

"நீதான் என்னைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லி விட்டாயாமே" என்று கூறினாள் ஜானகி.

"அடி அசடே! இதற்காகவா அழுகிறாய்! என் காலேஜ் படிப்பு முடிந்த பிறகுதான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று சொன்னேனே தவிர, அடியோடு உன்னைக் கல்யாணமே செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லவில்லையே! உனக்கும் எனக்கும் இந்த வருஷமே கல்யாணம் நடத்திவிட வேண்டும் என்று சொன்னார்கள். அதற்குத்தான், இப்போது முடியாது, இரண்டு வருஷம் கழித்துச் செய்து கொள்ளுகிறேன் என்றேன். உன்னைப் பிடிக்காமலா வேண்டாம் என்றேன். இல்லவே இல்லை! இதற்காகவா அழுவது!" என்று சொல்லி வந்த பொழுதே, ஜானகியின் கண்களிலிருந்து கண்ணீர் பொழிவது நின்றது. முகத்தில் ஒரு களை தோன்றலாயிற்று.

ஒரு கண நேரம், சுந்தரமும் ஜானகியும் மௌனமாக ஒருவரை ஒருவர் பார்த்தபடி நின்றனர்.

சுந்தரம் ஆரம்பித்தான். "ஜானகி, நான் ஒன்று கேட்கிறேன் சொல்லுவாயா!" என்றான்.

# க்ளோரோபில் சேர்ந்த கோலினாஸ்—

# 2 வழிகளில்* வேலைசெய்கிறது!






* ஆக்டிவ் க்ளோரோபில் வாய் நாற்றத்தை நீக்கி, சாதாரண ஈறு கோளாறு களைத் தடுத்து, பல்சொத்தையை ஒழிக்கிறது!

* ஊடுருவும் நுரை— வாய்க்கு புது மணம் தந்து, சமன குணமுள்ள க்ளோரோபிலை உங்கள் பிரஷ் நுழையாத இடங்களுக்கும் எடுத்துச் செல்கிறது!

க்ளோரோபில் சேர்ந்த கோலினாஸ் அரை அங்குல அளவு எடுத்து பிரஷினால் பல் துலக்குங்கள் . . . க்ஷணத்தில் அதன் அற்புத நுரை வேலை செய்வதை உணருவீர்கள் . . . சுத்தம் செய்கிறது, புது மணம் ஊட்டுகிறது, இயற்கைப் பச்சை க்ளோரோபிலை வாயிற்குள் ஒவ்வொரு மூலை முடுக்கிற்கும்—உங்கள் பிரஷ் நுழையமுடியாத இடங்களுக்குக் கூட—எடுத்துச் செல்கிறது. ஆக்டிவ் க்ளோரோபில் மற்றும் ஊடுருவும் நுரை—இரண்டின் நற்பலன்களும் அடையுங்கள்! க்ளோரோபில் சேர்ந்த கோலினாஸ் ஒரு டியூப் வாங்குங்கள்—இருவகை செயல் திறனுள்ள பற்பசை அது. ஒரு முறை உபயோகித்தால், எப்பொழுதும் அதைத்தான் உபயோகிக்கத் தோன்றும்!

இரண்டு வழிகளில் சிக்கனம்கூட!

**1** சிறிதளவே போதும். பெரிதும் பயன் படும்—சாதாரண முறையில் பல் துலக்குவதில், க்ளோரோபில் சேர்ந்த கோலினாஸ் அரை அங்குல அளவு அதைப் போல் 400 மடங்கு பெருகி, வாயின் ஒவ்வொரு மூலைக்கும் ஊடுருவிச் செல்கிறது. ஆம், அரை அங்குலம் போதும். ஆகவே ஒரு டியூப் நெடுநாள் வரும்!



**2** தவிர உங்கள் பணத்திற்கு ஏற்ற மிகப் பெரிய டியூப் அது!




இந்தியாவில் தயாரிப்பவர்கள்:
ஜியோஃப்ரே மானர்ஸ் & கோ. லிட்., மார்கெட் ஹவுஸ், பல்லார்ட் எஸ்டேட், பம்பாய் 1
டிரேட் மார்க் உடைமையாளர்கள்:
ஓவிட்ஹாம் பார்மசல் கம்பெனி நியூ யார்க், N. Y., யு. எஸ். ஏ.

GK. 6254



"இந்தக் குடை ஏது அப்பா? புதுக் குடையாயிருக்கிறதே! வாங்கினீர்களா, என்ன?"
"இல்லை, இல்லை. என் மாமாவின் பரிசு இந்தக் குடை!"
"உங்களுக்கு மாமாவே கிடையாது என்று சொல்லியிருக்கிறீர்களே!"
"அது வாஸ்தவம்தான். ஆனால் இந்தக் குடையில் 'மாமாவின் பரிசு' என்று போட்டிருக்கிறதே!"

"என்ன!" என்றாள் ஜானகி.

"நீ எனக்காக இரண்டு வருஷம் காத்திருப்பாயா" என்று கேட்டான்.

"ஓ, நிச்சயமாகக் காத்திருப்பேன்" என்றாள்.

"நிஜமா!" "நிஜமா!"

★

இப்படி ஆரம்பமான, அவர்கள் காதல் விளையாட்டுப் போல் வளர்ந்தது. ஊருக்கு வந்த பிறகு கடிதப் போக்குவரத்துக்கூட ஏற்படலாயிற்று. தன் அத்தானிடமிருந்து அன்பும் ஆர்வமும் பொங்கித் ததும்பி வரும் கடிதங்களால், அவளுக்கு ஏற்படும் ஆனந்தத்தை எவரிடமாகிலும் சொல்லிக் கொள்ள வேண்டும் போல் தோன்றியது! உள்ளத்தில் அடங்கி நிற்க மாட்டேன் என்று விட்டது அந்த ஆனந்தம். இத்தகைய அனுபவம் வேறு யாருக்காகிலும் ஏற்பட்டிருக்கக் கூடுமோ; அல்லது வேறு யாருக்கும் கிட்டாத பேறு தனக்கு மட்டும் கிடைத்திருக்கிறதோ என்று அறிய வேண்டும் என்ற ஆவல் வேறு. இக் காரணங்களாலேயே அவள் அன்று அப்படிக் கேட்டு வைத்தாள். கடைசியாக இன்று அவள் முழு விவரங்களையும் கூறித் தன் காதலனின் காதல் கடிதத்தையும் என்னிடம் காண்பித்து விட்டாள்.

அந்தக் கடிதத்தில் அவன் எவ்வளவு அன்பை அதில் கொட்டியிருந்தான்! மனித இதயத்தில் கூட இவ்வளவு அன்பு இருக்கக்கூடும் என்பது எனக்கு இப்பொழுதுதான் தெரிய வந்தது.

கடிதங்களைப் படித்து முடித்த பிறகு கடியாரத்தைப் பார்த்தேன். நான் வந்து வெகு நேரமாகி விட்டதை உணர்ந்தேன்.

"நேரமாகி விட்டது, ஜானகி, வருகிறேன்" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டேன்.

"டீச்சர், இதெல்லாம் பரம ரகசியம். யாரிடமும் சொல்லக் கூடாது. உங்கள் மனசுக்குள்ளேயே ரகசியமாக வைத்திருங்கள் டீச்சர்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள், ஜானகி.

"ஆகட்டும், ஜானகி. நான் யாரிடமும் சொல்ல மாட்டேன்" என்று வாக்குறுதி கொடுத்து விட்டு விடைபெற்றுக் கொண்டேன்.

★

"ஏண்டி மங்களம், எப்போது பார்த்தாலும் வாசலிலே போய் நிற்கிறே! அவா வருகிற சமயம் ஆச்சு! இந்தச் சமயத்திலே அவா கண்ணிலே பட்டால் என்ன நினைச்சுக்குவா!" என்று குரல் உள்ளேயிருந்து வந்தது. இந்தக் குரல் யாருடைய குரல் என்று நினைக்கிறீர்கள்! சாக்ஷாத் அந்த மங்களத்தின் தாயாரின் குரல்தான் அது.

ஆனால், யாரோ வரப்போவதாக மங்களத்தின் தாயார் சொல்கிறாளே, யாரைச் சொல்கிறாள்! யார் வரப் போகிறார்களாம்!

யாருமில்லை; மங்களத்தைப் பெண் பார்க்க வரப் போகிறார்களாம், மாப்பிள்ளையும் அவர் பெற்றோரும். இந்த மாப்பிள்ளைக்கு வயசு என்ன இருக்கும் என்று நினைக்கிறீர்கள்! நாற்பதுக்கு மேல் என்று நினைவிருக்கட்டும். ஆமாம், இரண்டாங் கல்யாணந்தான். என்ன செய்வது! மங்களத்தின் பெற்றோரால் முதல் தாரமாகக் கொடுக்கக் கூடிய நிலையில் இல்லையே! இரண்டாயிரம் கொடு, மூவாயிரம் கொடு என்று கேட்டால் அவர் அவ்வளவு பணத்துக்கு எங்கே போவார்! அதனால் இரண்டாங் கல்யாணமாகக் கொடுத்து விடுவது என்று தீர்மானித்தார். அதன்படியே எங்கோ ஓர் இடத்தில் ஏற்பாடும் செய்திருந்தார். அந்த வரன்தான் இப்பொழுது மங்களத்தைப் பார்க்க வருவதாக இருந்தது.

மங்களத்திற்குத் தான் ஒரு கிழவருக்கு வாழ்க்கைப் படப் போகிறோமே என்ற வருத்தம் இல்லை.

புது தில்லியிலுள்ள அகில இந்திய ரேடியோவின் செய்தி அறிவிப்பாளரும், தில்லித் தமிழ்ச் சங்கக் காரியதரிசியும், தஞ்சை வக்கீல் ஓ. ஏ. நாராயணசாமியின் புதல்வருமான ஸ்ரீ ஓ. என். நாகரத்தினத்துக்கும் சென்னை, லயோலா கல்லூரிப் பேராசிரியர் ஸ்ரீ பாலகிருஷ்ணனின் புதல்வி சௌ. சுந்தரிக்கும் சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.



திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் பிரமுகர்களும் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினார்கள். வாழ்க மணமக்கள்!



புருஷன் :—உபயோகம் இல்லாத சாமான்களை யெல்லாம் வீட்டில் கொண்டு வந்து சேர்த்து விட்டாயே! நீ கடைக்குப் போனால் இப்படித்தான்!

மனைவி :—நீங்கள் ரொம்ப உபயோகமுள்ள சாமான்களையே வாங்கி வருவதாக எண்ணமோ?

புருஷன் :—நான் அப்படி என்ன உபயோகமில்லாத சாமானை வாங்கி வந்து விட்டேன்? எங்கே ஒன்று சொல் பார்க்கலாம்!

மனைவி :—அதோ நெருப்பு அணைக்கும் கருவி ஒன்றை வாங்கி வந்து மாட்டியிருக்கிறீர்களே, அது ஒரு தடவையாவது நமக்கு உபயோகப்பட்டதா?

தனக்குக் கல்யாணம் ஆக வேண்டுமே என்று தன் பெற்றோர் படும் கவலையிலும் கஷ்டத்திலுமிருந்து அவர்களை விடுவித்தால் போதும். அதற்காக இரண்டாந்தாரமாக என்ன, மூன்றாந்தாரம் நான்காம் தாரகமாகக் கூட வாழ்க்கைப் படத் தயாராக இருந்தாள் மங்களம்.

ஆனாலும், சமீப காலமாக அதாவது ஒரு மாத காலமாக, ஒரு புது வித அனுபவத்துக்கு அவள் உள்ளாகி வந்தாள்.

அதாவது, அவள் வீட்டின் எதிர்வீட்டில் ஒரு பையன் வந்திருந்தான். அவன் முகத்தில் அபூர்வமான களை வீசியது. அவன் இதழ்களில் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் முறுவல் அவ்வப்போது தவழ்ந்து செல்லும். அவன் பேசும் போது அவன் குரல் குயிலின் குரலைவிட இனிமையாக இருந்தது. மொத்தத்தில் அவன் நடை உடை பாவனை யாவுமே, அவளுக்கு ரொம்ப ரொம்பப் பிடித்திருந்தது. அவனைக் கட்டித் தழுவிக் கொள்ள வேண்டும் என்று உள்ளத்தில் உணர்ச்சி எழும். அணைத்து முத்தமிட வேண்டும் என்று அவளுடைய இதழ்கள் துடிக்கும். அவன் மேனியை வருட வேண்டும் என்று அவள் விரல்கள் விழையும்! ஏன், அவனுக்கு மாலையிட்டு அவனையே தன் கணவனாகப் பெறவேண்டும் என்று அவள் நெஞ்சம் துடிக்கும்!

இதெல்லாம் நடக்கக் கூடியவையா! அவளுக்கும் அவனுக்கும் வயது சமமாக இருக்கும். பார்க்கப் போனால் அவனுடைய வயது அவளுடைய வயதைவிடக் குறைவாகவே இருந்தாலும் இருக்கலாம். அப்படிப்பட்டவனுடன் கல்யாணம் என்பது சற்றும் சாத்தியமில்லை. இருப்பினும் அந்தப் பேதைப் பெண் மங்களத்தின் உள்ளத்தில் அவனிடம் அத்தகையதோர் உணர்ச்சி அவள் உள்ளத்தில் மட்டும் எழுந்து, அடங்கி விட்டது.

அதற்குப் பிறகு காலச் சக்கரம், எப்படி யெல்லாமோ உருண்டு ஓடி பத்து வருஷம் ஆயிற்று.

நாற்பது வயதுக் கிழவனை மணந்த குமாரி மங்களம், இரண்டாண்டுகளில் கைம்பெண் மங்களமாகி, மூன்றாண்டு பள்ளி மாணவியாகிப் பின்னர் டீச்சர் மங்களமாகி விட்டாள்!

இந்த டீச்சர் மங்களந்தான் நான், பிரைவேட் மாணவி ஜானகி தன் காதல் அனுபவங்களைக் கேட்டு விட்டுத் தன் வீட்டை நோக்கி நடந்தேன் அல்லவா! அப்போது எனக்கும் இத்தகைய காதல் அனுபவம் ஏற்படச் சந்தர்ப்பமே இல்லாமற் போய் விட்டதைப் பற்றி நினைத்துக் கொண்டே நடந்து வந்தேன். அப்போது திடீர் என்று, என் சிறு வயதில் எதிர் வீட்டுச் சிறுவன் மீது கொண்ட ஒரு உணர்ச்சி, காதல் என்று கூறத் தகுமோ என்று நினைத்தேன், நினைத்தேன், நினைத்தேன்.

கால்கள் தன்னை எங்கே இழுத்துச் செல்கின்றன என்பது தெரியாமல் நடந்து போனேன்.

அந்தப் பையனின் முகம் புகையுண்ட சித்திரம் போல் என் மனக் கண் முன் வந்து நின்றது. ஆனால், அவனைப்பற்றி என் உள்ளத்தில் அந்நாளில் எழுந்த உணர்ச்சிகள், எண்ணங்கள் யாவும் அப்படியே மறுபடியும் எழுந்தன!

இந்த உணர்ச்சிக்குத்தான் காதல் என்று பெயரா! 'காதல்' என்றால் ஆண் பெண் பரஸ்பரம் அன்பு இருக்க வேண்டும் அல்லவா!...... அவசியமில்லையோ! பின் காதல் என்றால் என்ன!

"அம்மா! வண்டி! வண்டி!" என்று பின்னால் வந்த குதிரை வண்டிக்காரன் எச்சரிக்கை செய்த பிறகுதான் நான் சுய நினைவு பெற்றேன். அப்போது தன் வீட்டைக் கடந்து வெகு தூரம் வந்து விட்டதை யுணர்ந்தேன்.

★

டப் டுப் என்று பட்டாஸ் வெடித்துக் கொண்டிருந்தது ஜானகி வீட்டில்.

ஜானகி புதுப் புடவை உடுத்திக் கொண்டு உற்சாகமாக இருந்தாள்.

குசலம் விசாரித்து விட்டு வரச் சென்ற நான், "ஜானகி, கங்கா ஸ்நானம் ஆயிற்று! உன் கணவர் வந்திருக்கிறாரா! முன்னே, இரண்டு வருஷங்களுக்கு முன்னே அவருடைய கடுதாசிகளைக் காண்பிப்பாயே, அப்போதிருந்த அன்போடேயே இருக்கிறாரா! அல்லது அதைவிட அதிகமாகியிருக்கிறதா!" என்று கேட்டேன்.

"அதிகம் என்றால் இவ்வளவு என்றில்லாமற் போய், உபத்திரவம் என்ற நிலைக்கே வந்து விட்டது!" என்றாள்.

"அப்படியா, ரொம்ப சந்தோஷம்!"

"உன் அகத்துக்காரர் யாருடி! நான் அவரைப் பார்க்கலாமோ!"

"அதோ இருக்கார் பாருங்கோ, என் அப்பாவோடு பேசிக் கொண்டு, அவரே தான்" என்றாள்.

கூடத்தில் சென்று எட்டிப் பார்த்த நான் ஒரு கணம் பிரமை பிடித்து நின்று விட்டேன்! ஏனெனில், நான் சிறுவயதில் பார்த்த சிறுவனே யல்லவா ஜானகியின் கணவனாக வாய்த்திருக்கிறான் என்று அறிந்தால், என்னால் எப்படி ஆச்சரியப் படாமலிருக்க முடியும்!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras

வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன

பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன

**ஸன்லைட்**
**சோப்பில்** தான்




துணிகளை
அடித்துத் துவைக்காமலே
வெண்மையாகவும்
பிரகாசமாகவும்
சலவை செய்கிறது!

102-50 TM

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*